# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



"நானும் ஆக்ஷன் கிங்தான்!"

KALKI • 11.01.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஏழைகளின் வக்கீல்!

- மேலாண்மை பொன்னுசாமி



திகு...திகு... திருமங்கலம்!

- நேரடி ரிப்போர்ட்

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

#1.RADIAL ROAD, PALLIKARANAI, CHENNAI- 600 100

PH: 22469200 66300300 9840049561. FAX: 22463282 66300400

E-mail: info@drkamakshimemorialhospital.org. Webside: drkamakshimemorialhospital.org.





Dr. T.G.Govindarajan

President - Founder - Medical Director

Dr.Kamakshi Memorial Hospital, Pallikaranai about 2kms from Velachery, is a 150 bedded super specialty hospital has created great strides in the field of health care in a very short duration. Started just three years ago, the hospital has turned out to be a referral institution. It has borne all specialties and state-of- the art facilities under roof. However it has evolved as a main referral centre in fields such as Cardiology, Cardiothoracic surgery, neurology and neuro surgery and Cancer treatment. Being the only major hospital in this part of the city, the hospital has evolved as a major trauma care centre. With round-the- clock casualty serviced and ICU managed in house intensivists it has saved many lives of accident victims. The hospital is also planning for an on-going trauma awareness and preventive programme. The hospital is the only one of its kind in this part of the world having all specialists starting from General Medicine & Intensive Care through Radiation Oncology services under one roof. The hospital has well qualified specialists offering high quality services in various specialities of Medicine & Surgery. Recently the hospital has the pride of inaugurating PET CT – the first of its kind in Tamilnadu in collaboration with Cancer institute, Adyar.

Principle: The guiding principle of the hospital is to offer the ***latest in health care facilities at Par with international standards (obviating the need to go abroad for treatment) and also make them available to increasing numbers of our population.***

To meet the stringent demands of quality health care the services of several talented and dedicated medical professionals (both within the country and overseas) has been and a huge investment made in infrastructure and medical equipments.

***ALL FACILITIES UNDER ONE ROOF.***



CT-SCAN



LINAC



CATH LAB



CABG - UNDER PROCESS



NEURO SURGERY



PET-CT - FIRST IN TAMILNADU

CARDIOLOGY, NEUROSURGERY, LAPAROSCOPY & ENDOSCOPY, CARDIAC SURGERY, NEPHROLOGY, OBSTERTICS & GYNAECOLOGY, TRAUMA CARE, ORTHOPAEDICS, GASTROENTEROLOGY, NEUROLOGY, NUCLEAR MEDICINE, ENT & OPHTHALMOLOGY, UROLOGY, BLOOD BANK, MAXILLOFACIAL SURGERY, ONCOLOGY – SURGICAL – RADIATION & MEDICAL ONCOLOGY

PET CT CENTRE AT CANCERINSITUTE (WIA)CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR,CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE



## Dr. KAMAKSHI GROUP OF HOSPITALS

LAKSHMI NURSING HOME, PALLAVARAM

PET – CT CENTRE, ADYAR

Dr. KAMAKSHI MEMORIAL MULTSPECIALITY CENTRE



# கல்கி

## அடுத்தடுத்த இதழ்களில் அதிரடியாய்...

| | | |
|---|---|---|
| 18-01-09 | வல்லினத்தையும் மெல்லினமாக்கும் **சொல்வாசம்** | தஞ்சாவூர்க்கவிராயர் - கவிதைத்தொடர் |
| | குடும்பத்தில் நலம் விசாரிக்கும் **ஹாய் டார்லிங்!** | டாக்டர் விஜய் நாகசாமி - கவுன்சலிங் தொடர் |
| 25-01-09 | தெக்கத்தி மண்வாசனையோடு **காற்று விடும் பருவம்!** | பாரதிபாலன் - தொடர்கதை |
| 02-02-09 | நீங்களும் ஹீரோவாகலாம் **ஜாலி எலக்ஷன்** | - கல்லூரி கலாட்டா |
| 09-02-09 | கல்பாக்கம் : **அணு உலையா... அனைவருக்கும் உலையா?** | - பதற வைக்கும் ரிப்போர்ட்! |



**சி. இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி.**
**அறிவின் முதிர்ச்சி கல்வியாலா...? அனுபவத்தினாலா..?**

கல்வியாலும் அறிவு வரும். ஆனால் அனுபவத்தால்தான் அது முதிர்ச்சி அடையும்.

**கே. சுதர்ஷன், தூத்துக்குடி.**
**விஷயத்தைக் காதில் போட்டு வைப்பதுதானே வழக்கம்... அதென்ன மெட்ராஸ் பாஷையில் மட்டும், ''அவன் கைல சொல்லி வை'' என்கிறார்கள்...?**

காரியம் நடக்க காதும் காதும் வச்சா

# புடவையைக் கண்டுபிடித்தது யார்?

மாதிரி வைக்க வேண்டியதை 'கைல' வச்சிட்டு அப்பால சொல்லு என்று, நாசூக்காகச் சொல்கிறார்கள் மெட்ராஸ் பாஷையில். சுத்தத் தமிழில் சொல்லப் போனால் 'கையூட்டு'.

**ரேவதி, டெல்லி.**
**கிரிக்கெட் அம்பயருக்கும், எமனுக்கும் என்ன ஒற்றுமை...?**

நீங்கள் எதிர்பார்க்கும் பதில், இரண்டு பேருமே 'அவுட்' ஆக்கறவங்க. எதிர்பார்க்காத பதில் அம்பயர் போனா ஆல்-அவுட். எமன் வந்தா ஆள் அவுட். அம்பயருக்கு ஆறுல ஓவர். எமனுக்கு ஆறுலயும் ஓவர். நூறுலயும் ஓவர். அம்பயர் கையைத் தூக்கினா அவுட். எமன் கையை விரிச்சா அவுட்.

**சு.மோகன், மங்கலம்.**
**வரப்போகும் புத்தாண்டை வரவேற்க வாழ்த்தாக ஒரு வெண்பா கூறுங்களேன்?**

எனக்கு வெண்பா வித்தையைக் கற்றுத் தந்தவன் என் நண்பன் சு.ரவி. நான் காரியமாக எழுதுபவன். சு.ரவி காரணமாக எழுதும் ஆசு கவி. என் எழுத்து கெலிக்கும். ஆனால் அவன் எழுத்து பலிக்கும். புத்தாண்டை வரவேற்கும் பொறுப்பை அவனிடமே விட்டு விடுகிறேன். இனி வருவது அவன் எழுதிய வெண்பா:

''அன்பு நெய் ஊற்றி, அறிவுச் சுடரேற்றி
துன்ப இருளைத் துரத்திவிடு
இன்பநிலை
ஆழ்த்தி அருள்கூட்டும் புன்னகையால்
புத்தாண்டை
வாழ்த்தி வரவேற்போம் வா...''

**ஜி. ஜெயராமன், கூந்தலூர்**

***எடுக்க எடுக்கக் குறையாத பாத்திரம் 'அட்சய பாத்திரம்' . அது போல போடப் போட நிரம்பாத பாத்திரம் இருக்கா?***

'நட்சத்திர பாத்திரம்' நடிகர் திலகம் அவர்கள். கட்டபொம்மன், வ.உ.சி., அப்பர், ஆழ்வார் என்று வித்தியாசமான கதாபாத்திரங்களைப் போடப் போட, அவற்றைச் சளைக்காமல் ஏற்று, ரசிகர்கள் சந்தோஷத்தில் தளும்பும் அளவுக்கு அவர்களை மகிழ்வித்து, கதாசிரியர்களால் நிரப்ப முடியாதபடி வளர்ந்துகொண்டே இருந்த பிரும்மாண்டமான நிறைகுடம் நடிகர் திலகம்.

**வேலுச்சாமி, அரக்கோணம்.**

***ரகசியமாகக் காரியம் செய்பவர்கள் பற்றி...?***

சீக்ரெட்- சிகரெட், இரண்டுமே Injurious to Health.

**மீனா ரெங்கநாதன், மேற்கு மாம்பலம்.**

***பஞ்சமா பாதகங்கள் எவை...?***

ஐம்புலன்கள்...

**த.சத்தியநாராயணன், அயன்புரம்.**

***புடைவையைக் கண்டுபிடித்தவர் யார்..?***

இதனால் செலவு ஜாஸ்தியாகும்; பட்ஜெட் உதைக்கும் என்று தெரிந்திருந்தும் புடைவையைக் கண்டுபிடித்த அந்தப் 'பருத்திவீரன்' துணிவுள்ளவன் மட்டுமல்ல. துணி-உள்ளவனும் கூட!

**பா. அசோக், விருதுநகர்.**

***பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பது, ஆணும்-ஆணும் பழகினாலா...? அல்லது ஆணும்-பெண்ணும் பழகினாலா...?***

ஆண்பாலும் புளிக்கும்... பெண்பாலும் புளிக்கும்...!



# கிரேஸியைக் கேளுங்கள்




**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: **லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# திகு...திகு...



* பத்மநாபன் (அ.இ.ச.ம.க.)

திருமங்கலம் தொகுதியில் இடைத்தேர்தல் நடக்கிறது என்பதைவிட, ஒரு திருவிழா நடப்பது போலத்தான் கிராம மக்கள் அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள். மோதல், கல்வீச்சு, அரிவாள் வெட்டு, நாட்டு வெடிகுண்டு... என்று கிலி ஏற்படுத்தும் விவகாரங்கள் எல்லா கட்சித் தொண்டர்களிடையேயும் இருந்தாலும், சாதாரண மக்களை அவை ஒன்றும் பாதிப்பதில்லை. திருமங்கலம் தெரு ஒன்றில், மதுரை மாவட்ட முக்கிய அ.தி.மு.க. பிரமுகரான ராஜன்செல்லப்பாவைச் சந்தித்தோம். ''மின்வெட்டு, விலைவாசி, கருணாநிதியின் குடும்ப விவகாரம் ஆகியவை காரணமாக தி.மு.க.வைத் தோற்கடிப்பது என்ற முடிவுக்கு மக்கள் வந்துவிட்டார்கள். இதைப் புரிந்துகொண்ட ஆளும் கட்சி, கரன்ஸியைக் காற்றாய்ப் பறக்கவிடுகிறது. அது மட்டுமா? ஊருக்கு ஊர் கிடாவெட்டி, பிரியாணி வேறு! தி.மு.க.காரர்கள் நடத்தும் பிரியாணி விருந்தில், இலைக்கு அடியில் பணக் கவரை வைத்துவிடுகிறார்கள். இப்படிச் சாப்பிடுபவர்கள் துரோகம் செய்யாமல் உதயசூரியனுக்கு வோட்டுப் போடுவார்கள் என்பது அவர்கள் நம்பிக்கை.

ஆனால், அது பொய்த்துப் போகும். எங்களையெல்லாம் தொகுதியைவிட்டுத் துரத்திவிடுவதற்குத் திட்டம் போட்டு வேலை செய்கிறார் அழகிரி'' என்று புலம்புகிறார் ராஜன்செல்லப்பா.

''கறி சோறு போட்டாங்கய்யா. ஆனா, பணம் கொடுக்கலை'' என்கிறார் கொக்குளத்தைச் சேர்ந்த 85 வயது பாப்பாத்தி பாட்டி. ஆனால், அனுப்பானூரணி கல்யாணமண்டபங்களில் தி.மு.க.வினர் தினமும் பிரியாணி விருந்து தருவதாகத் தொகுதியெங்கும் பேச்சு இருக்கிறது. கள்ளிக்குடி அருகில் வில்லூர் என்ற கிராமத்தில் விருந்து போடப்பட்டதாக பலர் உறுதியாகக் கூறினார்கள். கிளிமங்கலம் கிராமத்தில் பிரியாணி போடுவதாக நம்மிடம் அ.தி.மு.க. பிரமுகர்கள் சொன்ன போது, அந்தக் கிராமத்துக்கு விரைந்தோம். ''இங்க விருந்து இல்லீங்க'' என்று கிரா

# திருமங்கலம்!


தளபாண்டியன் (தே.மு.தி.க.)


* முத்துராமலிங்கம் (அ.தி.மு.க.)


* லதா அதியமான் (தி.மு.க.)

## - நேரடி ரிப்போர்ட்

மத்து தே.மு.தி.க. இளைஞர்கள் சொன்னார்கள்.

விருந்து ஒரு பக்கம் இருக்க, வாக்காளர்களுக்கு ஆயிரம் ரூபாய் பணம் கொடுப்பதாகவும் தொகுதியில் பேச்சு இருக்கிறது. இதில் தி.மு.க.வினரும், அ.தி.மு.க.வினரும் ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்டுகிறார்கள். கள்ளிக்குடியில் நாம் சந்தித்த அ.தி.மு.க. தொண்டரான ஆத்தம்பட்டி வெற்றிவேல், ''அவங்களும் ஒரு நோட்டு (ஆயிரம்) கொடுத்தாங்க; நாங்களும் கொடுத்தோம்'' என்று போட்டுடைத்தார். தொகுதி முழுக்கச் சுற்றிப்பார்த்த போது தி.மு.க. கொடியுடன் டாடா சுமோக்கள், உட்புற கிராமங்களிலும் நிழலாடுவது தெரிந்தது. தே.மு.தி.க. தொண்டரான சென்னம்பட்டி லட்சுமணன், ''தி.மு.க., அ.தி.மு.க. ரெண்டு பேருமே இந்தக் கிராமத்தில் பணம் கொடுக்கறாங்க. என்னோட குடும்பத்துக்கு தி.மு.க. பணம் கொடுக்கிறது. ஆனால், அ.தி.மு.க. எனக்குத் தராது; எனது குடும்பத்தில் வோட்டுள்ளவர்களுக்குத் தரும். அதுதான் வித்தியாசம்'' என்கிறார்.

திருமங்கலம், அ.தி.மு.க.வுக்குச் சாதகமான தொகுதி என்பதில் சந்தேகமில்லை. கடந்த இருபது வருட காலத்தில் நடந்த சட்டமன்றத் தேர்தல்களில், 1996 தேர்தலைத் தவிர மற்ற தேர்தல்களில் அ.தி.மு.க.வோ, அல்லது அதன் கூட்டணிக் கட்சியோதான் வென்றிருக்கிறது. 1996ல்


* தி.மு.க.பிரசாரத்தின்போது...


கரு.நாகராஜன்


லட்சுமணன்

திமுக சார்பில் நின்று வென்ற முத்துராம லிங்கம், இப்போது அ.தி.மு.க. வேட் பாளர். அழகிரியை எதிர்த்து, தா.கிருஷ் ணன் வழக்கில் சாட்சி சொன்ன இவர், தி.மு.க.வை மல்லுக்கட்ட சரியான ஆள் என்று தொகுதி மக்கள் ஒப்புக்கொள் கிறார்கள். ஆனால், அ.தி.மு.க.வுக்குச் சம பணபலம் இருந்தாலும், பின்னணியாக அதிகார பலம் இல்லாததால் கொஞ்சம் தடுமாறுகிறது, அவ் வளவுதான். அ.தி. மு.க.வின் மற்றொரு மாவட்டச் செயலா ளராகச் சுற்றி வருகிறார் வைகோ.

தி.மு.க. பிரசாரத் துக்கு அழகிரிதான் லீடர். ஆனால், அவரு டைய பாணி வெளிப் படையானது அல்ல. அதிகாரிகள் மற்றும் கட்சி மட்டங்களில் யார், யார் எப்படிச் செயல்படவேண்டும் என்பது கச்சிதமா கவும், ரகசியமாகவும் தீர்மானிக்கப்படு கிறது. பதினைந்து அமைச்சர்கள், இருபது மாவட்டச் செயலாளர்கள், ஐம்பது சட்ட மன்ற உறுப்பினர்கள், நூறு ஒன்றியச் செயலாளர்கள் ஆயிரக்கணக்கான தொண் டர்கள் என்று தி.மு.க.வினர் களத்தில் இருக்கிறார்கள். தேர்தல் தேதிக்கு பதி னைந்து தினங்கள் முன்னரே வந்துவிட்ட வெளியூர் தி.மு.க.வினர், கிராமங்களில், கட்சிக்காரர்கள் வீட்டில் உறவினர்கள் போலத் தங்கி தங்கள் 'கைவரிசையை' காட்டுகிறார்கள். வெளியூர்க்காரர்கள் ஏழாம் தேதிக்குள் வெளியேறிவிட வேண்டும் என்று தேர்தல் அதிகாரி சொன்னாலும், அது எடுபடாது என்பதே நிலை. இந்தச் சூழலில் ''உள்ளூர் அ.தி.மு.க. ஆதரவா ளர்களுக்கும், வெளியூர் தி.மு.க.வின ருக்கும் மோதல் கடுமையாக இருக்கும். அதனால் சட்டம், ஒழுங்கு தள்ளாடும்'' என்பது பலரது கணிப்பு. தி.மு.க. வேட் பாளர் லதா அதியமான், அழகிரியின் 'உத்தி களை' மட்டுமே நம்பி களத்தில் நிற்கிறார்.

சிவகங்கோட்டை மற்றும் அதன் சுற்று வட்டாரங்களில் பிரேமலதா விஜயகாந்த் பிரசாரம் செய்தபோது, மக்கள் எழுச்சி யுடன் அவரது பேச்சைக் கேட்பதைக் காண முடிந்தது. மிக எளிமை யான பேச்சு. ''உங் களுக்கு டி.வி. கிடைச்சுதா? நிலம் கிடைச்சுதா, எரிவாயு அடுப்பு கிடைச்சுதா?'' என்று கேட்டு, ''ஆனால், கேப்டன் இலவசமாக எதுவும் கொடுக்க மாட்டார். வீட்டுக்கு ஒரு வேலை கொடுப்பார். ஒரு மாறுதலை உருவாக்க எங்களை வெற்றிபெறச் செய்யுங்கள்'' என்கிறார் பிரேமலதா. ஆனால், ''இரு கழகத்தவரும் பணம் கொடுத்தால் வாங்கிக் கொண்டு வோட்டை எங்களுக்குப் போடுங்கள்'' என்று அவர் சொன்னதுதான் நெருடலாக இருக்கிறது. பணமே வாங்கக் கூடாது என்றல்லவா அவர் சொல்ல வேண்டும்! கடந்த தேர்தலில் கட்சிக் கட்டமைப்பு சரியில்லாத நிலையில் 20,000 வோட்டுக்கள் வாங்கினார் தே.மு.தி.க. வேட்பாளர் தனபாண்டியன். அவரேதான் மீண்டும் வேட்பாளர். ஆனால், இப்போது


ராதிகா


பிரேமலதா

# திருமங்கலத் துளிகள்...

* திருமங்கலம் கொசு வித்தியாசமான சைஸில் யாரையும் உட்காரவிடாமல் துரத்துகிறது!
* இந்தத் தொகுதியில் மூன்று முறை வென்று, மூன்று முறை தோற்று, தொகுதியின் நெளிவு சுளிவுகளை அறிந்தவர் காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர் என்.எஸ்.வி.சித்தன். இவர் தி.மு.க.வுக்கு வெளிப்படையாக உதவுவதைவிட, பின்னணியில் சுறுசுறுப்பாக இருக்கிறார்.
* எல்லா கட்சிகளும் கலைக் குழுக்களையும் களத்தில் இறக்கியிருக்கின்றன. கரகாட்டம், கிராமங்களில் பட்டையைக் கிளப்புகிறது.
* மதுரை சுற்றுவட்டாரத்தில் டார்ச் லைட்டுகளுக்கு திடீர் கிராக்கி. அ.இ.ச.ம.க.வின் சின்னம் டார்ச் லைட்!. அந்தக் கட்சியினர் ஆளுக்கொரு டார்ச் லைட்டுடன் அலைகிறார்கள்.

எல்லா கிராமங்களிலும் கட்சிக் கிளைகள் இருக்கின்றன. அதுவும் இளைஞர்கள் பம்பரமாகச் செயல்படுகிறார்கள். இரு கழத்தினருக்கும் அடியோட்டமாக ஒரு பயத்தை உருவாக்கிக்கொண்டிருக்கிறது தே.மு.தி.க.

ச.ம.க.வுக்குக் கன்னித் தேர்தல். சரத்குமார் தனக்குள்ள பாப்புலாரிட்டியைத் தெரிந்துகொள்ள களத்தில் இறங்கியிருக்கிறார். ''உலக கிரிக்கெட்டில் பங்களா தேஷ் கலந்து கொள்ளவில்லையா? அதே ஸ்பிரிட்டில்தான் நாங்களும் இருக்கிறோம்'' என்கிறார் அதன் பொதுச் செயலாளர் கரு.நாகராஜன்! ஒரு பக்கம் 'அரசி' மறுபக்கம் சரத் என கலக்கிக்கொண்டிருக்கிறார்கள். ''கழகங்களுக்கு மாற்றாக மக்கள் எங்களைத்தான் நினைப்பார்கள். விஜயகாந்த் இப்போதே முதல்வராகிவிட்டது போல பேசிக்கொண்டிருக்கிறார். எனக்கு தே.மு.தி.க. ஜுஜுபி'' என்கிறார் சரத்.


ஸ்டாலின் - அழகிரி


ராஜன் செல்லப்பா


வெற்றிவேல்

''கடந்த இரண்டரை வருட தி.மு.க. ஆட்சியின் சாதனைகளில் ரேஷனில் ஒரு ரூபாய் அரிசி, இலவசத் தொலைக்காட்சி, பெண்கள் நலத் திட்டங்கள் ஆகியவை காரணமாக மக்கள் எங்களுக்கே வாக்களிப்பார்கள். மற்றபடி நாங்கள் பணம் கொடுக்கிறோம்; வன்முறையில் ஈடுபடுகிறோம் என்பதெல்லாம், அ.தி.மு.க.வின் தோல்வி பயத்தின் உளறல்'' என்கிறார் அழகிரி.

பிரதான கட்சிகளின் நான்கு வேட்பாளர்களும் முக்குலத்தோர். எனவே, தொகுதியில் பெரும்பான்மையாக இருக்கும் இவர்களது வோட்டுகள் பிரிவதற்கு வாய்ப்புகள் அதிகம்.

இடைத் தேர்தல் என்கிற தளத்திலிருந்து, அரசியல் கௌரவப் பிரச்னை என்கிற சிக்கலான பரிமாணத்துக்கு மாறியிருக்கிறது திருமங்கலம் தொகுதி!

– ப்ரியன்

படங்கள் : ஸ்ரீஅரசு

# இசை விமர்சனம்



# பாவம் எங்கே பரத் சுந்தர்?

**பி**ரபல பாடகர்கள் எல்லோரும் சங்கராபரணம், தோடி, கல்யாணி வட்டத்துக்குள்ளேயே சுற்றி வந்து சுகம் கண்டுகொண்டிருக்கும்போது பரத் சுந்தர் என்ற நேற்றைய இசை மழலை, இன்றைய இளம் பாடகர், நாடகப்ரியா என்ற மேளகர்த்தா ராகத்தை லாகவமாக விஸ்தரித்தது வியப்பை அளித்தது. இன்றைய இளம்தலைமுறையினரிடம் தைரியம், தன்னம்பிக்கை இரண்டும் இருப்பதை, பரத் சுந்தரின் பாட்டைக் கேட்டவர்கள் ஒப்புக்கொள்வார்கள்.

கிருஷ்ணகான சபாவின் மினி ஹாலில் நாடகப்ரியா ராகம் பாடி, 'இதி ஸமயமு ப்ரோவ ராதா' என்ற வாசுதேவாச்சார் க்ருதிக்கு பல்லவியிலேயே நிரவல் செய்து ஸ்வர அலங்காரம் செய்தது கட்டாயமாக 'பேஷ் பேஷ்' பெற வேண்டியதுதான்! முன்னால் வந்த 'ஸதத கணநாதா' என்ற புரந்தர தாஸர் க்ருதியும் ரசிகப்ரியாவில் ரசிக்கும்படி அமைந்திருந்தது.

கீரவாணி ராகத்தில் ஒரு பெண்மையின் மென்மை இருக்கும். பரத் அந்த ராகம் பாடியபோது ஒருசில பகுதிகளில்தான் அதன் மென்மை தெரிந்தது. மற்ற இடங்களில் அந்தப் பெண் உருட்டல், மிரட்டலில் காணாமல் போய் விட்டாள்! பரத் சுந்தர் போன்ற நம்பிக்கை நட்சத்திரங்கள் ராகங்களை வெறும் ராகமாகப் பார்க்காமல், உள்ளே மறைந்திருக்கும் தனிப்பட்ட குணங்களையும், அழகையும் உணர்ந்து கொண்டால், பாட்டு மேலும் சுகம் பெறும். பயம் இல்லாமல் பாடிய பரத்சுந்தர் பாவத்தையும் தனது பக்கபலமாக்கிக் கொள்ளட்டும். இரண்டாம் காலம் ஸ்வரங்கள் பாடுகிறபோது அவை சீறிப் பாய்ந்து இனிமை இழக்கின்றன.

பரூர் அனந்தகிருஷ்ணன் வயலினில் பாவமும், கனமும் தெரிந்தது. பாராட்ட வேண்டிய வாசிப்புத்தான். குருராகவேந்திரா, சந்திரசேகர சர்மா என்ற இரண்டு இளசுகள்தான் மிருதங்கமும், கடமும் வாசித்தனர். நல்ல தடாலடியான வாசிப்புத்தான்! ஆனால், தடாலடியாக சப்தம் கிளப்பினால்தான் நல்ல பக்கவாத்தியம் என்ற எண்ணம் அவர்கள் மனசில் இருந்தால் அதைக் கொஞ்சம் மாற்றிக் கொள்ளட்டும்!

# உருட்டாத சுருட்டி!

தேவவிரதன்

**ஸ்**வர்ண ரேதஸ் என்ற அபூர்வமான பெயர் கொண்ட இந்த இளைஞரின் சங்கீதத்தின் கவர்ச்சி அம்சம்: அவர் நன்கு அனுபவித்து, வாய் விட்டு, மெய் வருத்திப் பாடும் விதம். பிரபல இசைக் கலைஞர் சஞ்சய் சுப்பிரமணியத்தின் மாணவர் என்பதை உணர்த்த, இதைவிட வேறென்ன வேண்டும்?

சங்கீத வித்வத் சபையில் இந்த சீஸனில் ஸ்வர்ண ரேதஸின் குரலைக் கேட்க, நடுப் பகலிலேயே நல்ல ரசிகர் கூட்டம். பேகட வர்ணத்தில் ஆரம்பித்த கச்சேரி, 'முக்தி அளிக்கும் தில்லை' என்ற கோபால கிருஷ்ண பாரதியின் நவரோஜ் கிருதி வரை விறுவிறுப்பு கொஞ்சம் கூடக் குறையாமல் சென்றது.

பூர்வி கல்யாணியில் 'பரலோக சாதனமே' தியாகராஜ க்ருதியும், அதை ஒட்டிவந்த கல்பனா ஸ்வரங்களும் கனஜோர்! சுருட்டி ராக ஆலாபனையைப் பலர் எடுத்துக் கொள்வதில்லை. ஆனால், இந்த இளைஞர் சுருட்டியை அலட்டாமல், கண்டபடி சுருட்டாமல், தேவையில்லாமல் உருட்டாமல், அழகாகப் பிரித்து, வி(வ)ரித்து பாடிக் காட்டினார். தொடர்ந்து வந்த தீக்ஷிதரின் நவக்ரஹ கீர்த்தனை 'அங்காரகம்' அருமை. இதற்கு அநாவசிய ஒப்பனைகள் செய்யாமல் விட்டதே, ஸ்வர்ண ரேதஸின் ஞானத்துக்கு நல்ல அறிகுறி.

நீலாம்பரியில் வந்த 'காணக் கண்ணாயிரம்' என்ற ஆனையய்யாவின் தமிழ்ப் பாடல், அழகான தாலாட்டாகச் சற்று கண்களைக் கிறங்க வைத்தது. 'ம்ஹூம் தூங்கி விடவேண்டாம்' என்பது போல், பின்னால் பிரதானமாக வந்த கரகரப்ரியா ஆலாபனை எல்லோரையும் நிமிர்ந்து உட்கார வைத்தது.

ரேதஸின் குரல் வளமாக இருந்தாலும், மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் நிறையக் கற்பனையுடன் சிறிது கஷ்டமும் தெரிகிறது.

'பக்கல நிலபடி'யும், 'தனுவுசே பந்தன' நிரவலையும் மிகச் சுத்தமாகவும், சுகமாகவும் வழங்கினார். ஸ்வரங்களில் வேகம், துடிப்பு, சுறுசுறுப்பு!

வயலின் வாசித்த எஸ்.கார்த்திக், பாடகருக்குத் தாம் எந்த வகையிலும் குறைந்தவரில்லை என்பதை ஒவ்வொரு இடத்திலும் நிலைநாட்டிக் காட்டினார். கரகரப்ரியா ஆலாபனையும், நிரவலில் ஆழ்ந்து பங்கு பெற்று நடத்திச் சென்ற பாங்கும் கார்த்திக்கின் திறமைக்கு நிரூபணம். அதிகம் அலட்டாமல் மிருதங்கம் வாசித்த உமையாள்புரம் எஸ்.கல்யாணராமன், கச்சேரிக்கு மற்றுமொரு ப்ளஸ் பாய்ண்ட்.



**'காதலில் விழுந்தே'னில் கலக்கிய நகுலன்-சுனேனா ஜோடி மீண்டும் 'மாசிலாமணி'க்காக சேர்ந்திருக்கிறது. ஷூட்டிங் ஸ்பாட்டில் இருந்த நகுலனிடம் பேசினோம்.**

# நகுலன் பேட்டி

**உங்களை அறிமுகப்படுத்திய ஷங்கர், பிரபலமாக்கிய 'காதலில் விழுந்தேன்' இயக்குநர் பி.வி.பிரசாத்; இவர்களிடமிருந்து எதையாவது கற்றுக் கொண்டீர்களா?**

''ஷங்கரின் இயக்கத்தில் அறிமுகமாகியது எனது பாக்கியம். அவரின் திட்டமிட்ட உழைப்பும், குறிபார்த்து ஜெயிப்பதும் ஒரு மாஸ்டர் பிளான். அதன் சில துளிகளை அப்போது கற்றுக் கொண்டேன்.

பிரசாத்தும் நானும் ஒரே தலைமுறை என்பதால், அவருக்கு 'காதலில் விழுந்தேன்' முதல்படமாக இருந்தாலும் வெற்றி மட்டும்தான் எங்கள் வைராக்கியமாயிருந்தது. இயக்குபவரிடமிருந்து இருப்பதையெல்லாம் கற்க வேண்டும் என்பதே இந்த இடத்துக்கு என்னைக் கொண்டு வந்திருக்கிறது. பாய்ஸ் டீமில் இருந்த சாய் என்பவர் 'மாஸ்கோவின் காவேரி' என்ற படத்துக்கு இசையமைக்கிறார். பரத் பெரிய ஹீரோவாகிவிட்டார். நினைத்தாலே சந்தோஷமாயிருக்கிறது.''

**அஜீத்-விஜய் இவ்விருவரில் யார் இடத்தைப் பிடிக்க திட்டம்?**

''இவர்கள் இருவருமே எனக்கு குருநாதர்கள். விஜய்யிடமிருந்து டான்ஸையும் அஜீத்திடமிருந்து அடக்கத்தையும் ஒவ்வொரு புதுமுகமும் கற்றுக்கொள்ள வேண்டும்.''

**ஆக்ஷனில் நீங்கள் அர்ஜுன் சாரின் வாரிசு என்ற பேச்சு அடிபடுகிறதே?**

''அப்படியா? கேக்கவே ரொம்ப சந்தோஷமாயிருக்கு. இப்படி எதாவது சொல்லிக்கிட்டே இருந்தா வாழ்க்கை எவ்வளவு தெம்பாயிருக்கும்! நானும் 'ஆக்ஷன் கிங்'தான் அப்படின்னு 'தில்'லா சொல்லிக்க இன்னும் நிறைய வொர்க் பண்ண வேண்டியிருக்கு.''

**மாசிலாமணியிலும் சுனேனாவை ஜோடியாக சேர்க்க ஏன் சிபாரிசு செய்தீர்கள்?**

''ஐயோ... சார்... இப்படியெல்லாம் கேட்டு வம்புல மாட்டிவிட்டுடாதீங்க. நானே வாய்ப்பு தேடும்போது, மத்தவங்களுக்கு எப்படி சிபாரிசு பண்ணுவேன்! சுனேனா இப்படத்தின் டைரக்டர் மனோகரனின் சாய்ஸ். எனக்கும் இதுக்கும் எந்த சம்பந்தமுமில்ல. ஆளை விடுங்க ஜர்னலிஸ்ட்!''

**தனுஷ் போல் நீங்களே தனியாக காமெடி செய்யும் ஐடியா இருக்கிறதா?**

''எதிர்காலத்தில் இன்னும் திறமைகளை வளர்த்துக்கொண்ட பிறகுதான் தனியாக காமெடி செய்வது பற்றி யோசிக்க முடியும்.''

**கோலிவுட்டுக்கும் பாலிவுட்டுக்கும் என்ன வித்தியாசம் தெரியுது?**

''கோலிவுட்டில் லைட் பாய் முதல் டைரக்டர் வரை எல்லா டிபார்மெண்டிலேயும் நேரம் தவறாமை, கண்ணியம், தொழில் பக்தி, கடும் உழைப்பு போன்ற குணாதிசயங்களைக் கொண்டுள்ளனர். பாலிவுட்டில் தமிழ் இண்டஸ்ட்ரியிடமிருந்து இப்போதுதான் இதெல்லாம் கற்றுக்கொண்டு வருகிறார்கள். அதைவிட ஒரு விஷயம்... மற்ற நகரங்களில்

இருப்பதைவிட சராசரி சென்னை வாசி வாழ்க்கையை ரசித்து அனுபவிக்கிறான்... அவனவன் அளவில்.''

நடிகர் ஜீவாவைப் போல் நடனப் போட்டிக்கு நடுவராக டி.வி.யில் பங்கேற்பீர்களா?





# நானும் ஆக்ஷன் கிங் தான்!

''பங்கேற்க மாட்டேன். என்னுடைய நடனத்துக்கு ஆடியன்ஸ் நடுவராக இருந்து மார்க் போட வேண்டும். நான் பிறருக்கு மார்க் போட்டால் அவ்வளவு நன்றாக இருக்காது.''

- ராகவ் குமார்

பாலிவுட் நடிகைகள் ஃபேஷன், உடை விஷயத்தில் சர்வதேச அளவில் பாப்புலராகி இருக்கிறார்கள். இவர்களுக்கென ட்ரஸ் டிசைன் பண்ணும் ஃபேஷன் டிஸைனர்களும் இன்று நட்சத்திர அந்தஸ்தில் இருக்கிறார்கள். அந்த வகையில் மனீஷ் மல்ஹோத்ரா, நீத்தா லுல்லா, அனாசிங், ரிக்ராய்... போன்ற எண்ணற்ற ஃபேஷன் டிஸைனர்கள் ராப்பகலாக உழைத்து, புதுசு புதுசாக வடிவமைத்து பாலிவுட் நடிகைகளை ஃபேஷன் 'திவா'வாக மாற்றுகிறார்கள்.

ஃபேஷன் மாகஸின்கள், விமர்சகர்கள் அவ்வப்போது பெஸ்ட் ட்ரஸ் பண்ணும் பாலிவுட் ஹீரோயின்கள் யார் என கணிக்கிறார்கள். அவர்களில் ஒருசிலரின் டிரஸ்ஸிங் சென்ஸைப் பார்ப்போம்...

# கலக்கும் ஹீரோயின்கள்!

**பிபாஷா பாசு :**

ட்ரெண்ட் ஸெட்டர் என்ற டைட்டிலை பிபாஷாவுக்குத் தாராளமாகக் கொடுக்கலாம். வெஸ்டர்ன், இண்டியன், இரண்டு வித உடைகளிலுமே கலக்கும் பிப்ஸ் சமீபத்தில் புதுவித ஹேர் ஸ்டைல் செய்து, ப்யூட்டி டபுளாகக் கூட சக ஹீரோயின்களுக்கு ஏக பீதி. பாய் ஃப்ரெண்ட் ஜான் ஆப்ரஹாம் செம குஷியில் இருக்கிறாராம். ஃபேஷனில் பிபாஷாதான் பாட்ஷா!

**ப்ரீத்தி ஜிந்தா:**

கூலாக இருக்கும் ப்ரீத்தி காஷுவலாக ஜீன்ஸ், டீ-ஷர்ட்; பிஸினஸ் மீட்டிங் என்றால் கார்ப்பரேட் லுக்கில் சூட்; கான்ஸ் ஃபிலிம் ஃபெஸ்டிவல் என்றால் கவுன்; பாய் ஃப்ரெண்ட் நெயஸ் வாடியாவுடன் ரேஸ் கோர்ஸில் வெஸ்டர்ன் லுக்கில் பெரிய்ய ஹாட் (தொப்பி)... எனப் பலவித தோற்றத்தில் கலக்குகிறார். இவருக்கு எல்லாமே பொருந்திப் போவது

ப்ளஸ் பாயிண்ட்!

**கத்ரீனா கைஃப் :**

லக்கி ஹீரோயின் கத்ரீனா நடித்த எல்லா படமுமே சூப்பர் ஹிட்! மெழுகு பொம்மை போன்ற கத்ரீனாவின் பெரிய பலம் இவரின் உயரம் மற்றும் சிக்கென்ற தோற்றம். எனி டைம் மிஸஸ் சல்மான் கானாக ஆகும் யோகம் வரலாம் என சினி வட்டாரங்கள் தெரிவிக்கின்றன. வெஸ்டர்ன் உடை போட்டாலும், சல்வார் கமீஸ், புடைவையிலும் ஜொலிக்கிறார்.

**கரீனா கபூர்:**

ஜீரோ சைஸிலிருந்து திரும்பவும் பழைய ஃபிகருக்கு மாறிவரும் கரீனாவின் லுக், கல்லூரிப் பெண்களிடையே படு பாப்புலர். பட்டியாலா ஸல்வார், மேலே டீ-ஷர்ட், கை நிறைய வளையல், கண்களில் காஜல்... என கரீனாவின் மேக்கப் ஏக்தம் ஹிட்! இந்தியாவின் விக்டோரியா பெக்ஹாம் என்ற செல்லப் பெயர் இவருக்கு!



**தீபிகா படுகோன்:**

உயரம், கண்கள், ஸ்மைல், அளவான மேக்கப்... என எல்லாமே கச்சிதம். ஒரு ஸ்வீட் கர்ள் இமேஜ் இவருடையது. ரிஷிகபூர்-நீதுசிங்கின் மருமகள் ஆவேன் என மிஸ் படுகோன் தீவிரமாக இருக்கிறாராம்.

**மலாய்கா அரோரா:**

சைய்யா சைய்யா என ஓடும் ரயிலில் இடுப்பை ஒடித்து ஆடிய பெண்மணி படா ஸ்டைல் அம்மணி. அதிக டோஸில் கவர்ச்சி காட்டும் மலாய்காவின் ஃபிகரைப் பார்த்து பொருமித் தள்ளும் பெண்களே அதிகம்.

**ஷில்பா ஷெட்டி:**

சூப்பர் ஃபிகர், ஹாட் பேப்... என வெளிநாட்டுப் பத்திரிகைகளே வர்ணிக்கின்றன. டிஸைனர் வேர் புடைவை, வெஸ்டர்ன் அவுட்ஃபிட்டில் கலக்கும் ஷில்பா, லண்டனுக்கும் மும்பைக்கும் பறந்து கொண்டிருக்கிறார்.

**ரேகா:**

ஐம்பதைத் தாண்டிய ரேகா, இன்றும் ஃபேஷனில் இருபது வயதுப் பெண்களுக்கு குருவாக இருக்கிறார். எந்த ஃபங்ஷனாக இருந்தாலும், ரேகா என்ன ட்ரஸ்ஸில் வருவார் என்ற ஆவலை ஏற்படுத்திவிடுவது இவருடைய ஸ்பெஷல். காஞ்சிப் பட்டுப் புடைவைகள், நவீன பாணி நகைகள், கையில் டஜன் கணக்கில் வளையல்கள்... என ரேகாவின் ட்ரஸ் என்றுமே பேசப்படுவது அவரின் ஸ்டைல் முத்திரை!

**- லதா சேகர்**

**உடையழகு...நடையழகு...**





# கல்கி



2009 ஜனவரி 11
ஸர்வதாரி மார்கழி 27
மலர் : 67
இதழ் : 24

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## காஷ்மீர் தேர்தலும் காங்கிரஸின் கடமையும்!

உமர் அப்துல்லாவை முதல்வராக ஏற்ற பிறகு, அமைச்சரவை அமைக்கும் முழு உரிமையும் அவருடையதே. அதில் காங்கிரஸ் தலையிடலாகாது. ''இரு கட்சியினர் கொண்ட ஒரு கமிட்டியை அமைத்து அமைச்சரவையும் ஆட்சி முறையும் குறித்து முடிவுகள் எடுக்கப்படும்'' என்று உமர் அப்துல்லா கூறியிருப்பது கவலை தருகிறது.

காஷ்மீர் தேர்தல், மிகுந்த அழுத்தங்களுக்கிடையே, வெற்றிகரமாக நடந்து முடிந்திருக்கிறது. அம்மாநில மக்கள் முன்னெப்போதைக் காட்டிலும் அதிக அளவில் வாக்களித்திருக்கிறார்கள். பிரிவினை வாதிகளின் மிரட்டல்களையும் தேர்தல் புறக்கணிப்பு உத்தரவையும் பொருட்படுத்தாமல், மக்கள் தங்கள் வோட்டுக்களைப் பதிவு செய்திருப்பது, அவர்கள் இந்த நாட்டின் பேரில் கொண்டுள்ள அபிமானத்தையும் ஜனநாயகத்தின் மீது வைத்துள்ள நம்பிக்கை யையும் உணர்த்துகிறது. அந்த நம்பிக்கைக்கு, தேர்தல் கமிஷனின் முயற்சிகள் பெரிதும் உதவியிருக்கின்றன.

மக்களின் நல்லுணர்வுகளை மதித்தாவது காங்கிரஸ் பனிச்சென்று முடிவெடுத்திருக்க வேண்டும் - தேசிய மாநாடு கட்சியுடன் சேர்ந்து காஷ்மீரில் கூட்டணி ஆட்சிக்கு நிபந்தனைகளின்றி உடனே வழி









வகுத்திருக்க வேண்டும். இதைச் செய்யாததால், எடுத்த எடுப்பிலேயே, புதிய ஆட்சியின் அடிப்படைகள் பலமாக இல்லை என்கிற சமிக்ஞையைத் தீவிரவாதிகளும் பிரிவினைவாதிகளும் பெறுவதற்கு இடமாகிவிட்டது.

மக்களின் நம்பிக்கையை வெற்றியடையச் செய்வதுடன், காஷ்மீரின் பாதுகாப்பையும் வளர்ச்சியையும் உறுதி செய்கிற பொறுப்பு, தேசிய மாநாடு - காங்கிரஸ் கட்சிகளுக்கு உள்ளது. இரு கட்சிகளின் இளைய தலைவர்களான உமர் அப்துல்லாவும் ராகுல் காந்தியும் சிறந்த நண்பர்களாக இருப்பது மிகப் பெரிய அனுகூலம். இந்த அனுகூலத்தின் முழுப் பயனை காஷ்மீர் மக்கள் அடைய வேண்டும்.

ஒற்றுமையான கூட்டணி ஆட்சி காஷ்மீரில் அமைந்து, திறம்படச் செயல்பட்டால், அம் மாநில மக்களின் நம்பிக்கை பெருகுவதுடன், பிரிவினை சக்திகளின் ஆதிக்கம் நிச்சயமாக வலுவிழக்கும்.

எந்த மாநிலத்தில் கூட்டணி ஆட்சி அமைந்தாலும் மக்கள் நலன் என்ற நோக்கில் சிந்தித்து, ஒட்டுறவுடனும் ஒத்துழைப்புடனும் இயங்குவது முக்கியம்; அவசியம். அதிலும் காஷ்மீரில் அத்தகைய ஆட்சி அமைக்கப்படுகிறபோது, காஷ்மீரிகளின் நலன் மட்டுமின்றி, தேசத்தின் ஒட்டுமொத்த நலனையும் நிர்ணயிக்கக்கூடிய ஆட்சியாகவே அது அமைய முடியும்.

''காஷ்மீரில் தேர்தல்கள் வெற்றிகரமாக நடந்து, முடிவுகள் வெளியாகியிருப்பதை, உலக நாடுகள் உதாரணமாகக் கொள்ள வேண்டும்'' என்று சோனியா காந்தி பேசியிருக்கிறார். அங்கே அமைகிற ஆட்சியும் உலகுக்கு உதாரணமாகவும், பிரிவினை சக்திகளுக்கு முற்றுப்புள்ளி யாகவும் அமைவது மேலும் பெருமை சேர்க்கும். ●



# திண்டுக்கல் சாரதி

கறுப்பா இருக்கறதால தனக்குக் கல்யாணமே ஆகாதோன்னு ஏக்கத்திலிருக்கும் ஒருத்தனுக்கு, சிவப்பான மனைவி கிடைத்தால் எப்படிப்பட்ட சிலிர்ப்பான கலவரங்கள் நிகழுமோ அதைச் சிரிக்கவும் சிந்திக்கவும் தந்திருக்கிறார்கள். மலையாள வாசனை வீசாத அளவுக்கு, தமிழ்ப்படுத்தித் தந்ததால் கேரள சீனிவாசனின் கதை வெற்றி பெற்றிருக்கிறது. இயக்குநர் சிவசண்முகத்துக்கு முதல் படமாம். சபாஷ்!

தாழ்வுமனப்பான்மை கொண்ட கதாபாத்திரத்தில் கருணாஸ் மிகவும் பொருந்திப் போகிறார். கல்யாணம் ஆன பிறகு, சிவப்பா இருக்கும் மனைவியிடம், ''இந்த கலர் ஒரிஜினலா.. மேக்கப்பா?'' எனக் கேட்பதும், மனைவி கார்த்திகா, 'ஒரிஜினல்' என கிசுகிசுக்கும் குரலில் சொல்லிக் கண் சிமிட்டுவதும் கவிதை. அதே நேரத்தில், கோலம் போடப் போகும் மனைவியை அடுத்தவர்கள் பார்த்து விடக்கூடாதென வேட்டியைக் கொண்டு மறைப்பதில் ஆரம்பிக்கும் சந்தேகம், தன் சொந்தத் தம்பி மீது பாய்ந்து, உறவுகளை உருக்குலைய வைப்பது அந்தோ பரிதாபம்! கருணாஸுக்கு ஏற்ற கதை. கதைக்கு ஏற்ற கருணாஸ். வேறு யார் நடித்திருந்தாலும் பாத்திரத்தோடு பொருந்திப் போயிருப்பார்களா என்பது சந்தேகம்தான்.

சுமாருக்கும் கொஞ்சம் அதிகமான அழகு கொண்ட கார்த்திகா, கருணாஸோடு ஜோடி போட்டதில் கொஞ்சம் அழகாகவே தோன்றுகிறார். ஆனால், கணவனின் சந்தேகமறிந்து கலங்குகையில் கவனம் பெறுகிறார். என்னதான் சந்தேக மனப்பான்மை கொண்டிருந்தாலும், தெருவில் வசிக்கும் பையன்களையும் மனைவியையும் இணைத்துப் பார்த்து மருகுவதும் அதற்காக அவர்கள் பேசும் வசனங்களும் டூ டூமச். இதுதான் கருணாஸ் பாத்திரத்தில் மிகப் பெரிய ஓட்டை.

இந்தச் சந்தேகக் கலவரத்தில் 'தல' அஜீத்தும் வந்து கிச்சுக்கிச்சு மூட்டிப் போவது கலகல கற்பனை.

எதற்கெடுத்தாலும் குறள் சொல்லி கொலை பண்ணும் எம்.எஸ். பாஸ்கர் காமெடி கொடியை நாட்டுகிறார். லிவிங்ஸ்டன், சிட்டிபாபு கோடம்பாக்கத்து போலிஸ்காரர்கள். எனவே 'சிக்குபுக்கு ரயிலே'ன்னு சிரிப்புக்கு உதவி செய்கிறார்கள்.

தினா இசையில் 'திண்டுக்கல்லு' ஆட்டம் போட வைக்கிறது. இருப்பினும் கதையோடு ஒட்டாமல் கல்லா கலெக்‌ஷனுக்கு மட்டும் பயன்படுத்தப்பட்டிருப்பது குறைதான். தாஜின் ஒளிப்பதிவு, ராம்நாத் வசனம் இரண்டுக்கும் பூங்கொத்து. திண்டுக்கல் சாரதி - திகட்டாத தித்திப்பு.

- மகிமைராஜன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## புத்தாண்டு-பொங்கல் நல்வாழ்த்துக்கள்

### ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.



இங்குதான் வாசிப்பார். அதன் பின்பு, நன்றாக விடிந்ததும் தெருப் பக்கம் உள்ள உள் திண்ணையில், சன்னிதியைப் பார்க்க அமர்ந்து ஒரு ரெண்டு மணி நேரம் வாசிக்கத் துவங்குவார்.

அப்படி லயித்து, ஆசைதீர வாசித்தால்தான் பிள்ளைக்கு அன்றைய பொழுது விடிந்த மாதிரி இருக்கும்.

வாசித்து முடித்ததும் உடம்பு முழுசும் ஜலசந்திரா

# அதுவும்

சன்னிதி தெருவிலிருக்கும் பழைய காலத்து வீடுகளில் அதுவும் ஒன்று. விடியற்காலை ஐந்து மணிக்கே எழுந்த சிவானந்தம் பிள்ளை சாதகம் செய்யத் தயாராகிக் கொண்டிருந்தார். பின்கட்டுத் திண்ணையில் தென்னந்தோப்பைப் பார்த்து அமர்ந்தவாறு இரண்டு மூன்று சீவாளிகளை, தந்தக் குச்சியில் செருகி எடுத்து ஊதி ஊதிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பிள்ளை வாசிக்க ஆரம்பித்துவிட்டார். நாயனத்தின் கீழ் அனசில் நாயனப் பையையே கருட்டி பந்து போல வைத்து சத்தம் வராமல் வாசிக்கிறார். ஆறரை மணி ஆகும் வரை இப்படி ஒரு மணி நேரம் மாய் வியர்த்திருக்கும். துண்டால் வியர்வையைத் துடைத்துவிட்டு கொஞ்ச நேரம் ஆசுவாசம் கொள்வார். பின்பு ஒரு செம்பு தண்ணீரை எடுத்துக் குடித்துவிட்டு, வெற்றிலை சீவல் போட்டுக்கொண்டு குதப்பி, அதன் சாற்றை ருசித்துத் தொண்டைக் குழியில் இறக்குவார். ஒரு பத்து நிமிஷத்தில், ''ஏன்... இந்தா... காப்பி எடுத்தா...'' என்று வீட்டின் உள்ளே பார்த்து ஒரு குரல் கொடுப்பார். ருக்மிணியோ, இரண்டு பெண்களில் ஒன்றோ, காப்பியைத் தந்து விட்டுப் போவார்கள். இன்றும் அதுதான் நடந்தது.

இன்றைக்குக் கல்யாணியில்தான் துவங்கினார். எங்கெங்கோ சஞ்சாரம். சங்கீதம் தான் கேட்கிறவனையும் வாசிக்கிறவனையும் ஒருசேர ரசிக்க வைத்து விடுகிறதே.

இன்று அவருக்கே புதிதாகப் பட்ட மாதிரி சில பிடிகள். ப்ருஹாக்கள். சில நாள் அப்படி அமையும். எது எப்போ வரும் என்று தெரியாமல் அடுக்கடுக்காய் புதுசு புதுசாய்த் தோன்றுவதும், அதில் லயிப்பதும்தானே சிருஷ்டியின் ஆனந்த சூட்சுமம்.

வெளி கேட் தட்டும் சப்தத்தில் யோசனை விலகிற்று. பக்கத்து வீட்டுக்காரரின் சம்பந்தி ராமாமிர்தம் கேட்டுக்கு வெளியே ஒரு துணிப்பையோடு நின்று கொண்டிருந்தார்.

''வாங்க... வாங்க...'' என்று சொல்லிக் கொண்டே தாழ்ப்பாளைத் தள்ளி, கேட்டை அகலத் திறந்துவிட்டு கும்பிட்டார்.

''நமஸ்காரம்...''

''எப்ப சார் வந்தீங்க...?''

''நேத்து நைட்... காலைல உன் நாதஸ்வர வாசிப்போடதான் கண் விழித்தேன். ஒரு ஆரபி வாசிச்சியே... அடடா... போதும். நானும் கும்மோணம் வரும் போதெல்லாம் வருஷக்கணக்குல கேட்டுண்டுதான் இருக்கேன். அலுக்கலையேப்பா... எனக்கு.''

''சார்.. அதெல்லாம் ஒண்ணுமில்ல சார். எல்லாம் கடவுள் அனுக்கிரஹம்... வேற என்ன சொல்ல முடியும் நான். உங்கள மாதிரி விஷயம் தெரிஞ்சவங்க, ரசிச்சு, இப்படி தேடி வந்து சொல்றது சந்தோஷமா இருக்கு சார்...''

''சங்கீதத்தை வளர்த்ததுல நாதஸ்வரக்காராளோட பங்கு வாய்ப்பாட்டுக்குக் குறைஞ்சதில்ல தெரியுமோ உனக்கு... என்ன..? உங்களவாளுக்கு விளம்பரமும் இல்ல... மேடையுமில்ல...'' என்று கொஞ்ச நேர சங்கீத சம்பாஷணைகளுக்குப் பிறகு, அவர் கையில் வைத்திருந்த பையிலிருந்து ஸ்வீட், பிஸ்கெட் பாக்கெட், பழங்களை எடுத்து வைத்தார்.

''சார்... இதெல்லாம்... எதுக்கு சார்? வேணாம் சார்...''

''இதெல்லாம் உமக்கில்லங்காணும்... உம்ம பொண்களுக்கு... சும்மா... இரும்... சித்த...''

''சரி... இருங்க. ஒரு வாய் காப்பி சாப்பிட்டுப் போகலாம்'' என்று உள்கட்டு நோக்கித் திரும்பி, வாயைத் திறப்பதற்குள்...

''நோ... நோ... காப்பி... காலைலயே ஆயிடுத்து. நாளைக்கு வந்து நிதானமா சாப்பிடறேன்'' என்று சொல்லிக்கொண்டே விடு...விடுவெனப் போய் விட்டார்.

சங்கீதம் பற்றித் தெரிந்தவர். அதனால் அவர் சொன்னது உற்சாகமாக இருந்தது. ஆனாலும் மனம் இரண்டு கூறாய் மாறிச் செயல்படுவது போல இருந்தது இன்று.

'வெறும் வித்வானாதான் வாழணும்னு நினைச்சிருந்தா கல்யாணம் பண்ணிட்டிருந்திருக்கக் கூடாது. அப்படியே பண்ணிக்கிட்டாலும் புள்ளைங்களைப் பெத்துருக்கக் கூடாது. பெத்துட்டீங்க. பெத்தா மட்டும் போதுமா... இனிமே இங்க விக்கவோ அடகுவைக்கவோ ஒண்ணுமில்ல. ஒத்துக்கிற கச்சேரியை மட்டும் வெச்சுக் கல்யாணம் பண்ணிட முடியாது. நாதஸ்வரச் சத்தம்... உங்க பொண்ணுங்க கல்யாணத்துலயும் கேக்கணும்ங்கிறதை மறந்துடாதீங்க.'

# தாத்தா சொன்னதுதான்

ரவி சுப்ரமணியன்

'இதுவரை இந்த அளவுக்கு அவள் பேசினதில்லை. பாவம் அவளும் என்ன செய்வாள். கிடைச்சதிலிருந்தும் இருந்ததி லிருந்துமே இதுவரை குடும்பம் நடத்தியுள் ளாள்' என்று மனைவியின் நியாயத்தை யோசித்தார்.

மற்றவர்கள் போல் வேலை கிடைக் காமலோ, படிப்பு ஏறாமலோ, வீட்டு நிர்பந்தத்தாலோ, அவர் நாதஸ்வரத்தைக் கையில் எடுக்கவில்லை. விரும்பி சிட்ஷைக்கு வரும் ஒருசிலரைப் போல் தான், ஆசையோடு நாதஸ்வரத்தைக் கையிலெடுத்தார். அது அவரை எடுத்துக்



**வேலை கிடைக்காமலோ, படிப்பு ஏறாமலோ, வீட்டு நிர்பந்தத்தாலோ, அவர் நாதஸ்வரத்தைக் கையில் எடுக்கவில்லை.**

கொண்டதோ, இல்லை அதை இவர் எடுத்துக்கொண்டாரோ தெரியவில்லை.

'என்ன பெண்கள் இவர்கள் இருபது வருஷம் குடும்பம் நடத்திய பிறகும், கண வனைப் புரியாத பெண்கள்.' ஆதங்கம் மேலெழுந்தது. தாத்தாவின் நாதஸ்வர வாசிப்பில் பால்யத்திலிருந்தே மனசைப் பறிகொடுத்தவர் சிவானந்தம். அவரே இவருக்கு ஆசான். வீருசாமிப் பிள்ளை வாசிப்பென்றால் சாதாரணமில்லை. வித்வான்களின் வித்வான் அவர். சினிமா பாட்டுகளில் லயித்த உள்ளூர் காதுகளுக்கு அவரது நிபுணத்துவம் அவ்வளவு எட்ட வில்லைதான். இருந்தாலும், அவரது குந்தளவராளிக்கும் காவடிச் சிந்துக்கும் தோடிக்கும் நீலாம்பரிக்குமென இங்கும் சில தலைகள் அசைந்து கொண்டு தானிருந்தன.

தூக்கத்திலும் விழிப்பிலும் அப்படி ஒரு சுநாதத்தைக் கேட்டு வளர்ந்தவர் சிவானந் தம். குடும்பத்தின் இன்றைய பொரு ளாதாரச் சூழல், அவரைத் தமது வாழ்வைப் பின்னோக்கிப் பார்க்கத் தூண்டியது.

'அப்பா புத்திசாலி. இரும்புக்கடை வைத்துவிட்டார். நல்ல சம்பாத்தியம். என்னோடு பிறந்த இரண்டு அண்ணன் களையும் ஒரு அக்காவையும் நன்றாகப் படிக்க வைத்து கல்யாணம் செய்து செட்டில் பண்ணிவிட்டார். நானும் பி.எஸ்ஸி., முதல் வகுப்பில்தான் தேறி னேன். நாதஸ்வரமே நமக்குப் போதுமென மனசுக்குள் பிடிவாத மாய்த் தோன்றி விட் டது. அப்பாவும் சொல்லிப் பார்த்து விட்டுவிட்டார். 'ஏண்டா... வெளுத்தி... இவ்ளோ படிக்கட்டு நாதஸ்வரத்துல என்ன இப்ப வாசிக்க கிழிக்கப் போற?' என்று. அம்மா அப்பிராணி. அதுக்கு எதுவும் சொல்லத் தெரியாது. அக்கா மட்டும் 'அவன் இஷ்டப்படி விடுங்கப்பா...' என்றது. அப்பா தந்துவிட்டுப் போனதில் இந்த வீடுதான் மிச்சம் இப்போ. அதுவும் மிஞ்சியது ருக்மிணி சாமர்த்தியத்தில்தான். இல்லையெனில் என்னிடம் நாதஸ்வரம் மட்டும்தான் இருந்திருக்கும்.

எத்தனையோ பெரிய சங்கீத மேதை களும், அரசியல் பிரமுகர்களும் என்னைத் தேடி வருகிறார்கள். என் வாசிப்பை, தாத்தா போட்ட அந்தப் பிச்சையை, அதி லேயே நான் உழன்று உழன்று பெற்ற

நாதமகியைக் கேட்க அல்லவா எல்லோரும் வருகிறார்கள். அவர்களிடம் எப்படி நான் எதையும் கேட்பேன்? அவர்கள் தரத் தயாராக இருந்தாலும் எப்படி அதைப் பெறுவேன்? நினைக்கவே கூச்சம் பிடுங்கித் தின்கிறது.'

யோசனை கலைந்தது.

வாசல் கேட் அருகில் அக்கா...

''வா... வா... அத்தான்... எப்படி இருக்கு...?''

''இருக்காங்க... அவுங்களுக்கென்ன...'' என்றபடி உள்ளே வந்தாள்.

அக்காவைப் பார்ப்பது ஏதோ அம்மாவைப் பார்ப்பது போலத்தான் இருக்கிறது. வயசு ஆக ஆக அம்மா மாதிரியே ஆகிவிட்டது அக்காவும். நேற்று மனைவி பேசின பேச்சுக்கு, இன்றைக்கு அக்கா இங்கு வந்தது ஆறுதலாயிருக்கிறது.

**மா**லை ஆகியிருந்தது.

'காலையில் நான் வெளியே போனதும் என்னென்ன சொன்னாளோ அக்காவிடம்?' என்ற யோசனையில் திண்ணையில் தூணில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார் சிவானந்தம். உள்ளே பேசுவது அவருக்குக் கேட்க வேண்டுமென்றே சத்தமாகப் பேசிக் கொண்டிருந்தாள்.

''உங்களுக்குத் தெரியாததில்ல... இங்க பாருங்க அத்தாச்சி... வீட்ல ரெண்டு பொம்பளைப் புள்ளைங்க இருக்கு. எல்லா கச்சேரியும் ஒத்துக்க மாட்டாராம். எல்லாக் கல்யாணத்துக்கும் வாசிக்க மாட்டாராம். அட்வான்ஸ் குடுக்க வர்றவங்கள... கிடக்கான்க ஞானசூன்யம்...ன்னா... அவன் தானே பணம் தர்றான். ஒரு மனுஷனுக்குக் காசு பணம் இல்லையேங்கிற நினைப்பு கூடவா இல்லாம இருக்கும். வீடு என்ன கதியாவுமோன்னு மனசுல ஒரு திகில் இருந்தால்ல காசப் பத்தி நினைப்பு வரும். இந்த லட்சணத்துல யாருகிட்டயும் வாயைத் தொறந்து கடன் கூட கேட்க

மாட்டாராம். வெத்துப் பொழப்புக்கு இந்த வீராப்பு எதுக்குங்கிறேன்.''

''ச்சீ...சீ... கழுத.. என்ன பேசுற நீ... புரிஞ்சுதான் பேசறியா... தம்பி வாசல்ல தான் உக்காந்திருக்கு தெரியும்ல்ல...''

''இல்ல... அத்தாச்சி...''

''ஏ... ருக்கு.. அது எங்க தாத்தாவைக் கொண்டு வந்திருக்கும்மா... சின்ன வயசு லேர்ந்தே நாதஸ்வரமே கதின்னு இருந் துருச்சு. அதுகிட்ட வேற என்ன கெட்ட பழக்கம் இருக்கு சொல்லு. இந்த ரெண்டு பொண்ணையும் படிக்க வச்சுருக்கே அது பெரிசில்லையா உனக்கு.''

''ஆமா படிக்க வெச்சாரு. அதது ஏதோ ஸ்காலர்ஷிப்லயும் ரோட்டரி கிளப்ல தந்த பணத்துலயும் படிச்சுக்கிட்டு இருக்குதுங்க. கல்யாணம்ன்னா... ஒவ்வொருத்திக்கும் அஞ்சு அஞ்சு பவுன் கூடக் கிடையாது தெரியுமா... உங்களுக்கு''

''சரி... ருக்கு.. அதுக்குன்னு... நாப்பத்தி அஞ்சு வயசுக்கு மேல இன்னொரு புது வேலைக்கா அது போக முடியும்... அதக் குத்தி... குத்தி பேசிக்கிட்டே இருந்தா சரியாயிடுமா எல்லாம்.''

''ஆஹா... தம்பிய வுட்டுக் குடுத்துரு வீங்களா நீங்க... எல்லாம் ஒரே ரத்த மில்ல...''

''ஏ... ருக்கு... கோபப்படாத நான் சொல்றதைக் கேளு. இங்க... பாரு... அத்தையா... ரெண்டு பேருக்கும் என் நகையிலேர்ந்து என்னால ஆன அஞ்சு அஞ்சு பவுனை அதுங்களுக்குக் தாரேன். எனக்குன்னு புள்ளைங்க இருந்தாலும் வாங்கடின்னு இழுத்துக்கிட்டுப் போயிடு வேன். அதுக்கும்தான் எனக்குக் குடுப் பினை இல்ல.'' எதற்கும் பேசாமல் ருக்கு வெறித்தபடி அமர்ந்திருந்தாள். ''சரி... போ... ருக்கு.. இப்படிப் பார்த்துக்கிட்டே உட்கார்ந்திருந்தா ஒண்ணும் ஓடாது. நீ உள்ளே போய் சமையலைப் பாரு.''

சிவானந்தம் எல்லாவற்றையும் கேட்ட படி அமர்ந்திருந்தார். தம்பி உட்கார்ந் திருந்த திண்ணைக்கு எதிர்த் திண்ணையில் வந்து அமர்ந்தாள் நாகம்மா.

''யப்பாடி... இந்த ருக்கு... இப்படி... பேசுதேப்பா... அது சொல்ற வழிலதான் உனக்குத் தெரிஞ்சவங்ககிட்ட ஏதாவது பணத்துக்குக் கொஞ்சம் ஏற்பாடு பண்ணக் கூடாதா? கடனாக்கூட கேட்டா என் னப்பா... கல்யாணத்துக்காகத்தான கேக்கு றோம்.''

''எல்லாம் தெரிஞ்சுருந்தும் அவ சொல் றான்னு நீயும் இப்படிக் கேட்டா நான் என்ன செய்ய... சொல்லு.''

''சரிப்பா... நம்ம புள்ளைங்களைக் கரை

**நல்ல வித்வான்களுக்கு வீடு நிம்மதியா இருக்காதுங்கிறது விதிபோல இருக்கு.**



சேர்க்கணுமேப்பா... அதுக்கு என்ன பண்றது?''

''நாம நினைச்சது எல்லாம் நடந்துருதா... எல்லாம் நடக்காது. விடுக்கா... ஆதிகும்பேஸ்வரன் இருக்கான். மங்களாம்பா இருக்கா... நீதான் அடிக்கடி சொல்லியே திக்கற்றவனுக்கு தெய்வமே துணைன்னு. நீ... உள்ள.. போ... நான் கோயிலுக்குப் போயிட்டு வரேன்.''

''நானும் வர்றேன்ப்பா... இரு... எனக்கும் இப்ப கோயிலுக்குப் போனா தேவலைன்னு இருக்கு...'' என்று அவளும் கூடவே புறப்பட்டு வந்தாள்.

கோயிலில் சாமி தரிசனம் எல்லாம் முடிந்து, திருநீறு, குங்குமம் இட்டு நடக்கையில் சிவானந்தம் மௌனத்தைக் கலைத்தார்.

''ஒரு தடவை காலைல ஏழு மணிக்கெல்லாம் நம்ம காவிரிக் கரை பகவத் படித்துறைல புது பாடாந்திரத்துக்காக நானும் தாத்தாவுமா போனோம். அன்னைக்கு என்னமோ அது ஓடற தண்ணியைப் பார்த்தபடி உக்காந்துக்கிட்டு ரொம்ப நேரம் வாசிச்சது. நீ சம்பாதிக்காமயே இருந்திருக்கியே... ஆத்தா உன்னை எப்பயாவது திட்டிருக்கா தாத்தான்னு கேட்டேன்.

சிவா... வாசிக்கிறவன் வேற. வித்வான் வேற. வாசிக்கிறவன் அதிகபட்சமா நல்லா வாசிக்கிறவனா மாறுவான் அவ்வளவுதான். வித்வானா இருக்கறதுங்கிறது வேற. அப்புறம் சொந்த வீட்ல மானஅவமானம் பார்த்தா வித்வானா வாழ முடியுமா...?னு தாத்தா சொல்லிச்சு.

நல்ல வித்வான்களுக்கு வீடு நிம்மதியா இருக்காதுங்கிறது விதிபோல இருக்கு...''

நாகம்மாவுக்குக் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது. சட்டென தம்பியின் கையைப் பிடித்துக் கொண்டாள். அவருக்கும் அம்மாவைப் போன்ற அந்த அக்காவின் ஸ்பரிசம் அப்போது தேவையாகத்தான் இருந்தது. ●

தமிழ்நாட்டில் 1960களின் துவக்கத்தில் கடும் வறட்சி. பெருந்தலைவர் காமராஜ் முயற்சியால், மேலை நாடுகளிலிருந்து சீமைக் கருவேல மரங்களின் விதைகள் தருவிக்கப்பட்டு, விமானங்கள் மூலம் வறட்சிப் பகுதிகளில் தெளிக்கப்பட்டன. வெப்பம் தாங்கி வளரும் தாவரமான சீமைக் கருவேல மரம், தமிழகத்தின் பல மாவட்டங்களில் பரவலாக வளர்ந்து காடாயிருக்கிறது. அந்தக் கருவேலம் தான் ஒரு கிராமத்துக்குக் கரெண்டாக மாறியுள்ளது. முள்ளாகக் குத்திய கருவேலம் இப்போது வெளிச்சமாய்ப் பாய்கிறது.



தமிழ்நாட்டில் நான்கு பேரூராட்சிகளில் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டு வருகிறது. இதில் மதுரை மாவட்டம் டி.கல்லுப்பட்டி பேரூராட்சி முன்னிலை வகிக்கிறது. நம்முடைய அதிகப்படியான மின்சாரத் தேவைக்கும், இடையிலே ஏற்படும் மின்வெட்டுகளுக்கும், இத்திட்டமானது மிகவும் பயனுள்ளதாகும். இம்மாதிரியான மாற்று மின்சாரத்தால்தான் மின் பற்றாக் குறையினால் ஏற்படும் வெற்றிடங்களை நிரப்ப முடியும்!'' என உறுதியுடன் தெரிவிக்கிறார் மதுரை மண்டலப் பேரூராட்சிகள் நிர்வாக உதவி இயக்குநர் ஜெகன்னாதன்.

டி.கல்லுப்பட்டி பேரூராட்சியில் சுமார் ஆறரை லட்ச ரூபாய் திட்ட மதிப்பீட்டில் உருவாக்கப்பட்டுள்ளது. ''கருவேல விறகுகளை, அவை பச்சையாக இருக்கும்போது குறிப்பிட்ட அளவில் சின்னஞ்சிறு துண்டுகளாக சிறு கருவியின் மூலம் வெட்ட வேண்டும். அவற்றை வெயிலில் நன்கு காய வைக்க வேண்டும்.



காய்ந்துபோன கருவேலத் துண்டுகளை ஒரு பெரிய பாய்லரில் கொட்டி எரிக்க வேண்டும். கருவேலத் துண்டுகள் எரிய எரிய, அதிலிருந்து புகை ஒரு குழாய் மூலமாக, தண்ணீர் வழியாக பயணிக்கும் போது வாயு வடிகட்டப்படுகிறது. வடிகட்டப்பட்ட வாயு உமி வழியாகவும், காட்டன் துணி வழியாகவும் பயணமாகி ஃபில்டராகும். இதிலிருந்து சுத்திகரிக்கப்



கொண்ட மோட்டாரையும் அவ்வப்போது இந்த மின்சாரத்திலிருந்து இயக்கிக் கொள்கிறோம். வணிக ரீதியிலான மின் கட்டணத்தை ஒப்பிடுகையில், இந்த மின்சாரம் மிகவும் லாபகரமானது. ஒருநாள் உற்பத்தி ஆகும் மின்சாரம் 220 யூனிட். இதற்கு கரு

# கருவேல கரண்ட்



கலையரசி

பட்ட பயோ கேஸ் கிடைக்கும். அந்த பயோ கேஸ் மூலமா ஜெனரேட்டர் எந்திரம் இயக்கப்படுகிறது. ஜெனரேட்டர் இயங்கி மின் சக்தியாக உற்பத்தி ஆகிறது. உற்பத்தி ஆகும் மின்சாரம், மின் மீட்டர் அளவீட்டுக் கருவியில் பதிவாகி வெளியே அனுப்பப்படுகிறது!'' என்று எளிமையாக விளக்குகிறார் அதன் பணியாளர்களில் ஒருவர்.

''ஒரு நாளைக்குப் பன்னிரண்டு கிலோ வாட் மின் உற்பத்தி செய்யும் திறன் கொண்டது இந்த மையம். இருபத்தைந்து தெரு விளக்குகள், பேருந்து நிலையத்திலுள்ள ஆறு சோடியம் விளக்குகள், பேரூராட்சி குடிநீர் சப்ளைக்கென 7.5 குதிரை சக்தி

வேல விறகு செலவு, பணியாளர் சம்பளம் எல்லாம் போக நமக்கு லாபமாக தினசரி அறுநூறு ரூபாய் மிச்சமாகிறது. டி.கல்லுப்பட்டி பேரூராட்சியில் இத்திட்டத்தினைக் கடந்த ஆறுமாத காலமாக வெற்றிகரமாகச் செயல்படுத்தி வருகிறோம்!'' என்கிறார் பேரூராட்சி செயல் அலுவலர் கலையரசி.

அதுசரி! எல்லா பற்றாக்குறைக்கும் ஒரு மாற்றுத் தீர்வு உண்டு. அதைச் செயல்படுத்த, மக்கள் துயரை மகேசன் துயராக நினைத்து துரித நடவடிக்கை எடுக்கும் மனம்தான் வேண்டும்.

செய்தி, சித்திரம்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




விருதுநகரில், மேலாண்மறைநாடு என்ற கிராமத்தில் மளிகைக் கடை நடத்தி வரும் எளிய மனிதரைப் பற்றியே இப்போது தமிழகம் முழுதும் பேச்சு. இந்திய அரசின் 2009ஆம் வருடத்துக்கான சாகித்ய அகாடமி விருதை, தமது மின்சாரப்பூ எனும் சிறுகதைத் தொகுப்புக்குப் பெற்றிருக்கும் அந்த எளிய மனிதர் எழுத்தாளர் மேலாண்மை பொன்னுசாமி.

1972—ல் செம்மலரில் எழுதத் துவங்கி சி.பா.ஆதித்தனார் விருது உள்ளிட்ட 19 பல்வேறு விருதுகளைப் பெற்றவர். தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க துணைப் பொதுச் செயலாளராயும் இயங்கும் அவரைச் சந்தித்தபோது...

**சா**கித்ய அகாடமி விருதுப் பட்டியலில் தாங்கள் ஒரு வரலாற்று உடைப்பை ஏற்படுத்தியிருப்பதாகச் சொல்கிறார்களே... அப்படியென்ன உடைப்பு?

''அதாவது, த.மு.எ.ச.வில் ஏராள படைப்பாளிகள் இருந்தும், இதுவரை த.மு.எ.ச. முகாமையே இவ்விருதுக் குழு கவனத்தில் கொண்டதில்லை. அதுதான் வரலாறு... அது, இப்போது உடைக்கப் பட்டுவிட்டது.''

சாகித்ய அகாடமி விருதுக்கு த.மு.எ.ச. படைப்பாளிகள் தீண்டத்தகாதவர்கள் எனும் நிலை இருந்ததா...?

''அப்படி ஒரு பாரபட்சமான நிலை இருந்தது உண்மைதான். ஆயினும் இப்போது, த.மு.எ.ச.வுக்கு முதல் வரவாக எனக்கு இவ்விருது தரப்படுவதன் மூலம், சாகித்ய அகாடமி தேர்வுக் குழு மீது பல

# மக்களின் வக்கீல்!

—மேலாண்மை பொன்னுசாமி பேட்டி

புதிய நம்பிக்கைகள் எழுகின்றன.''

**'விருது' என்பதையும் தாண்டி என்ன விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது?**

''எழுத்தின் மீதும் எதிர்காலத்தின் மீதும் பல நம்பிக்கைகளை ஏற்படுத்தியுள்ளது. மக்கள் மேன்மைக்காகவும் மானுட உயர்வுக்காகவும் வியர்வை சிந்துகிற எல்லாப் படைப்பாளிகளுக்கும் இவ்விருது எழுச்சியைக் கொடுக்கும்.''

**கலை கலைக்காக, கலை மக்களுக்காக என்று இருமுனைகளில் இயங்கும் இலக்கியச் சூழலில், தங்களுக்கான இவ்விருது எதை அடையாளப்படுத்துகிறது?**

''கலை கலைக்காக என்பது கவைக்குதவாத வெட்டிப் பேச்சு, கலை மக்களுக்காக என்பதில் எந்தச் சமரசத்துக்கும் இடமில்லை. கல்கியில் முதன்முதலாக வெளியான 'சிபிகள்' கதை பன்றி மேய்க்கும் அருந்ததிய தொழிலாளியின் சாதிய ஒடுக்குமுறை அனுபவம் பற்றியது. இவையெல்லாம் என் வெற்றியை அடையாளப்படுத்துகின்றன.''



**இவ்விருது தங்களுக்கு ஒரு சாதனை என்றால் சோதனை எது?**

''எதையும் நான் சோதனையாகக் கருதுவதில்லை. எம் மக்கள் வாழ்வில் பின்னலிட்டுக் கிடக்கும் துயரங்களும், இனி 19 இந்திய மொழிகளில் வெளிவரும். இக்காரணத்துக்காகவே இவ்விருதை சாதனையாகக் கருதலாம்.''

**அரசியலையும் இலக்கியத்தையும் இணைத்தே படைப்பு தருகிறீர்களே... ஏன்?**

''அரிசியில் இருந்து கறுப்பு அரிசியைப் பிரிக்கலாம்... ஆனால் அரிசியிலிருந்து சோற்றைப் பிரிக்க முடியுமா...? அதுபோல் தான் அரசியலில் இருந்து வாழ்க்கையைப் பிரிக்க முடியாது. அப்படிப் பிரித்தால் அது ஆடையிலிருந்து நூலைப் பிரிப்பது போலாகும். வாழ்க்கை பற்றிப் பேசாமல் என்ன இலக்கியம் இருக்க முடியும். ஆனால், அரசியலை வாழ்க்கையில் குழைத்து எழுதிப் படிக்க ஓர் அழகியல் தேவைப்படுகிறது. அது தரமானதாக அமைந்தால் அந்த இலக்கியத்தைப் பிரசார 'நெடி'யிலிருந்து பிரசார 'மண'மாக மாற்றும்.''

**தங்கள் கதைகளில் கலையம்சம் இருப்பதில்லை என்று குற்றச்சாட்டு உள்ளதே..?**

''இது கலையம்சம் எது என்பதில் தெளிவில்லாதவர்கள் எழுப்பும் வாதம்.''

அரசியலை வாழ்க்கையில் குழைத்து எழுதிப் படிக்க ஓர் அழகியல் தேவைப்படுகிறது. அது தரமானதாக அமைந்தால் அந்த இலக்கியத்தைப் பிரசார 'நெடி' யிலிருந்து பிரசார 'மண' மாக மாற்றும்.

**வணிக எழுத்தாளர்களுக்குக் கிடைக்கும் வெளிச்சம் உங்களைப் போன்றவர்களுக்குக் கிடைக்கிறதா..?**

''அவர்களைவிட நல்ல, கௌரவமான வெளிச்சமே கிடைக்கிறது. ஆனால் பணம் தான் அவர்கள் பெறுவதில் ஆயிரத்தில் ஒரு பங்குகூடக் கிடைப்பதில்லை.''

**நவீன மற்றும் வெகுஜன எழுத்தாளர்களோடு உடன்படுவீர்களா...?**

''மானுட உயர்வுக்கு உழைக்கும் எல்லோரோடும் நான் உடன்படவே எண்ணுகிறேன். ஒரு பிற்போக்கான படைப்பாளியாக இருந்தாலும், அவரிடமிருந்து ஒரு முற்போக்கான படைப்பு வருமாயின் நிச்சயம் நான் அவர் பக்கமே.''

**பத்திரிகை, தொலைக்காட்சி உள்ளிட்ட தற்கால ஊடகத் துறையில் என்னென்ன மாற்றங்களை எதிர்பார்க்கிறீர்கள்?**



★ வைத்தீஸ்வரன்

''ஒட்டுமொத்த சமூகத்திடமும், அறிவுஜீவிகளிடமும், எல்லா மனிதர்களிடமும் எதிர்பார்க்கிற அதே நேர்மையையும், உண்மையையும், சமூக அக்கறையையும்.''

**எழுத்தாளருக்கு எழுத்தையும் தாண்டி உள்ள சமூகக் கடமைகள் என்னவென்று சொல்லுங்களேன்...**

''எழுத்தையும் தாண்டிய சமூக நடவடிக்கைகளில், இணைத்துக்கொள்ள வேண்டும். போராட்டங்களாகவும் இருக்கலாம், பண்பாட்டு மாற்றங்களுக்கான புதுமையான நடவடிக்கைகளாகவும் இருக்கலாம். சுதந்திரப் போராட்டத் தியாகி வ.உ.சி. சுதேசி உணர்வை ஊட்ட கப்பலையும் ஓட்டினார்; ஆசாரமான குடும்பமான தன் உயர்சாதிக் குடும்பத்தில் ஒரு அருந்ததி சிறுவனையும் வளர்த்தார். மகாகவி பாரதியார் தேசிய மாநாட்டிலும் கலந்துகொண்டார்; செல்லம்மாவை உட்கார வைத்து, தான் நின்ற நிலையில் புகைப்படமும் எடுத்துக் கொண்டார். இப்படியாக சமூக வாழ்வியலில், பண்பாட்டு நடவடிக்கைகளில் எழுத்தாளன் கொண்டிருக்கிற நம்பிக்கைகளுக்கு உண்மையாக இருப்பதே, எழுத்துக்கு எழுத்தாளன் கொடுக்கிற மரியாதை. எளிமையாகச் சொல்வதென்றால், எளிய மக்களின் வக்கீலாக எழுத்தாளன் இருக்க வேண்டும்.''

இப்பேட்டியின் முழு வடிவத்தை கல்கியின் www.kalkionline.com என்ற இணையதளத்தில் வாசிக்கலாம். ●

அமெரிக்காவில் இருக்கும் விளக்கு அமைப்பு... தமிழின் சிறந்த படைப்பாளியை ஆண்டுதோறும் தேர்வு செய்து பரிசளித்து கௌரவிக்கிறது. இவ்வாண்டுக்கான விளக்கு பரிசு ரூ.40,000/-யை கவிஞர் எஸ். வைத்தீஸ்வரன் பெறுகிறார். 'எழுத்து' காலகட்டத்தில் சி.சு. செல்லப்பாவால் அறிமுகப்படுத்தப்பட்டு 1958லிருந்து கவிதையில் இயங்கி வருபவர் எஸ். வைத்தீஸ்வரன். 72 வயதைக் கடந்த கவிஞர். இதுவரை ஆறு கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார். இதற்கு முன் சி.சு. செல்லப்பா, பிரமிள், ஞானக்கூத்தன், தேவதேவன் போன்றோர் விளக்கு பரிசு பெற்றிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இலக்கியத்தில் எழுத்துக் கலைஞர்களின் செயல்பாட்டுக்கு நியாயம் சேர்க்கும், இருப்புக்கு மதிப்பளிக்கும் விளக்கு அமைப்புக்கு பாராட்டையும், கவிஞருக்கு வாழ்த்தையும் பகிர்ந்துகொள்வது தமிழை வாசிக்கிறவர்களின் அசலான மகிழ்ச்சிதான்!

**- அமிர்தா**

# உயிரோடிருக்கும் சூரபத்மன்!



பகுத்தறிவும் இந்தக் காலத்துக் கல்வியறிவும் பெற்றவர்களுக்கு, நமது புராண இதிகாசங்களைப் படிக்கும்போதெல்லாம் சிற்சில சந்தேகங்கள் உண்டாகத்தான் செய்யும். ''இராவணனுக்குப் பத்துத் தலை இருந்ததா?'' என்று கேட்பார்கள். ''கும்பகர்ணன் வருஷத்தில் 364 நாட்கள் தூங்கியது உண்மைதானா?'' என்பார்கள். ''தாடகை மலையைத் தூக்கி எறிந்திருக்க முடியுமா?'' என்று சந்தேகப்படுவார்கள். ''யமனுக்கு வாகனம் எருமைக் கடா என்பது மெய்யா?'' என்று வினாவுவார்கள். ''சூரபத்மனுக்கு யானை முகத்தோடு ஒரு தம்பியும், சிங்க முகத்தோடு ஒரு தம்பியும் இருந்தது உண்மையா? வாலிக்கு அவ்வளவு நீளமான வால் உண்மையில் இருந்ததா? பரமசிவனுடைய குமாரன் சுப்பிரமணியன் குறவர் குலத்துப் பெண்ணை வேதியர் வேடம்பூண்டு கைப் பிடித்தானா? தசரதருக்கு அறுபதினாயிரம் மனைவிகள் மட்டுந்தானா?'' என்று இம்மாதிரி எத்தனையோ கேள்விகள் பகுத்தறிவு படைத்தவர்களுக்கு உதயமாகக் கூடியவைதான். இன்னும் பார்க்கப்போனால், பகுத்தறிவுக்காரர்களோடு (நமது ரஸிகமணி அடிக்கடி சொல்வதுபோல்) மெட்ராஸ் யுனிவர்ஸிடி பட்டதாரிகளுங்கூட அம்மாதிரி கேள்விகளைக் கூசாமல் கேட்பார்கள். கேட்பதோடு நில்லாமல், பதில் வேண்டும் என்பார்கள். சரியான பதில் கிடைக்காவிட்டால், அம்மாதிரி புராண இதிகாசங்களை நெருப்புக்கு இரையாக்கினால் என்ன என்றும் அவர்கள் கேட்கக் கூடும்.

பகுத்தறிவுக்காரர்களின் மேற்படி கேள்விகளுக்கு குருட்டு நம்பிக்கையுள்ளவர்கள் பதில் சொல்ல ஆரம்பித்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை. ''இராவணனுக்கு பத்துத் தலைதான்! தசரதருக்கு அறுபதினாயிரம் மனைவிமார்கள்தான்! இல்லாமல் எப்படியிருக்கும்? வால்மீகி முனிவர் பொய் சொல்லுவாரா?'' என்று இவர்கள் வாதமிடுவார்கள். ''முருகனுக்கு ஆறு தலைதான்! ஷண்முகம் என்ற பெயரே சாட்சி சொல்லுகிறதே? வேலன் வேதியரும் ஆனார்; வேங்கை மரமும் ஆனார். இல்லாவிடில் கந்த புராணம் பொய்யா?'' என்பார்கள்.

இவ்விதம் பகுத்தறிவும் குருட்டு நம்பிக்கையும் செய்யும் யுத்தம், இராம ராவண யுத்தத்தையும், சுப்பிரமணியர் - சூரபத்மன் யுத்தத்தையும் ஒத்துப் பிரமாதமாகிவிடும்.

பழைய புராண இதிகாசங்களைக் கொஞ்சம் அந்தரத்தில் நிறுத்தி வைத்துவிட்டு, தற்கால இலக்கியங்களுக்கு வருவோம். புதுமை எழுத்தாளரின் வசன காவியங்களையும், பகுத்தறிவுக்காகப் பிராணனைக் கொடுத்துப் போராடுவோரின்




எழுத்தோவியங்களையும், பேனா மன்னர்களின் ஜீவ சக்தி ததும்பும் காரசாரமான கட்டுரைகளையும் கவனிப்போம்:

''வங்காளத்தில் பஞ்சப் பேய் கோர தாண்டவம் ஆடுகிறது!'' என்று எழுதுவார்கள். ''தோழர் யுகப் புரட்சியார் சிம்ம கர்ஜனை செய்தார்!'' என்பார்கள். ''அடக்கு முறைப் பூதம் ஆ என்று வாயைத் திறந்து கொண்டு அலைகிறது!'' என்பார்கள். ''வைதிகக் குடுக்கைகள் தர்ப்பைப் புல்லை உருவிக்கொண்டு போருக்குக் கிளம்பிவிட்டன!'' என்பார்கள். ''மக்களின் நெஞ்சமாகிற எரிமலை நெருப்பைக் கக்கத் தொடங்கிவிட்டது!'' என்று எச்சரிப்பார்கள். ''தீண்டாமை அரக்கனைக் கொன்று மடித்துக் குழியை வெட்டிப் புதைக்க வேண்டும்!'' என்று கர்ஜிப்பார்கள். ''மானம் கப்பலேறிவிட்டது!'' என்றும், ''லஞ்சப் பிசாசு தலையை விரித்து ஆடுகிறது!'' என்றும் எழுதி வெள்ளைக் காகிதத்தில் அச்சுப் போட்டுக் கொடுப்பார்கள்.

''பஞ்சம் என்பது ஒரு பேயா? அது பரத நாட்டிய சாஸ்திரத்தைப் படித்துத் தாண்டவ நர்த்தனம் கற்றுக்கொண்டிருக்கிறதா? லஞ்சம் என்பது ஒரு பிசாசா? அதற்குத் தலை உண்டா? தலையில் ரோமம் உண்டா? அது தலையை விரித்துப் போட்டுக்கொண்டு ஆடுமா? அடக்குமுறை என்பது ஒரு பூதமா? அதற்கு வாய் உண்டா? மக்களின் நெஞ்சுக்குள்ளே எரிமலை இருப்பது உண்மையா? குடுக்கைகள் யுத்தத்துக்குக் கிளம்புமா? மானம் கப்பலேறினால், அதற்குப் பிரயாண அனுமதிச் சீட்டு வாங்கவேண்டுமா? கப்பலில் எந்த வகுப்பில் அது பிரயாணம் செய்யும்?'' என்றெல்லாம் கேட்டோமானால், ''ஓகோ! இது என்ன கேள்வி, இப்படியெல்லாம் கன்னா பின்னாவென்று கேள்வி கேட்கலாமா? பேய், பிசாசு, எரிமலை என்று எழுதுவதெல்லாம் விஷயத்தைச் சரியாக விளக்கி மனத்தில் பதியச் செய்வதற்காகத்தான்!'' என்று பதில் சொல்வார்கள்.

''நித்திரா தேவி, தன் இளந்தளிர்க்கைகளால் நமது கதாநாயகனை ஆலிங்கனம் செய்து கொண்டாள்!'' என்று புதுமை ஆசிரியர் எழுதுவதற்கும் மேற்கண்ட விதமான சமாதானந்தான் சொல்லுவார்.

இந்தச் சமாதானத்தை ஒப்புக்கொண்ட பிறகு, நாம் மறுபடியும் நமது புராண இதிகாசங்களுக்குக் கொஞ்சம் போக வேண்



டும். பத்துத் தலை ராட்சதர்களையும், எருமைக் கடா வாகனத்தையும், சூரபத்ம னையும், கஜமுகாசுரனையும், ஆறுமுகக் கடவுளையும், குறவர் குலப் பாவையை யும் நமது புராண இதிகாசங்களை எழுதிய பெரியோர்கள் சிருஷ்டி செய்த போது, இந்தக் காலத்து ஆசிரி யர்களைப் போலவே சிற்சில கருத்துக்களை நன்றாக விளக்குவதற்காகச் சிருஷ்டி செய்திருக்கக் கூடாதா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.




அப்படிச் சொந்தமாகச் சிந்தனை செய்ய முடியாதவர்கள், நவாப் ராஜமாணிக்கம் கம்பெனியார் நடத்தும் 'குமார விஜயம்' என்னும் அருமையான நாடகத்தைப் பார்க்கவேண்டும். பார்த்தால், நமது புராண இதிகாசக் கதைகளெல்லாம் அப்படி ஒன்றும் அபத்தமானவை அல்ல என்பதும், அவை அரிய பெரிய கருத்துக்களைக் கொண்ட கற்பனைச் சித்திரங்கள் என்பதும் தெரிய வரும். அவை பகுத்தறிவுக்கு விரோதமானவை அல்ல என்றும், பகுத் தறிவைப் பயன்படுத்தி உணரப்பட வேண்டியவை என்றும் கூடத் தெரிந்து கொள்ளலாம்.

குமார விஜயம் நாடகத்தின் ஆரம் பத்தில், சூரபத்மன் தர்பார் நடத்துகிறான். அவன் இருபக்கத்திலும், சிங்கமுகன், கஜமுகன் என்ற தம்பிமார் வீற்றிருக்கிறார் கள். உலகத்துக்குப் பயனுள்ள தொண்டு புரியும் சூரியன், சந்திரன், அக்கினி, வாயு முதலியவர்கள் சூரபத்மனுடைய அடக்கு முறைக்கு உட்பட்டுத் தர்பாருக்குக் கொண்டு வரப்படுகிறார்கள். அவர்களுக் கெல்லாம் சூரபத்மன் தண்டனை விதிக் கிறான். கஜமுகனும் சிங்கமுகனும் மதி மந்திரிகளாக இருந்து சூரபத்மனுடைய அகங்காரத்துக்கு அடிக்கடி தூபம் போடு கிறார்கள்.

இந்தக் காட்சியும், காட்சியில் வரும் சம்பாஷணைகளும், ''சூரபத்மன் எந்தக் காலத்திலோ இருந்து இறந்து போனவன் அல்ல; இன்றைக்கும் அவன் உயிரோடி ருக்கிறான்; ஏகாதிபத்திய தர்பாரை நடத்து கிறான்!'' என்று நன்றாக இனம் காட்டி அறிவித்து விடுகின்றன. இந்த ஆரம்பக் காட்சியின் உட்பொருள் விளங்கிய பிறகு, நாடகத்தில் பின்னால் வரும் பல கட்டங் களுக்கும் உண்மைப் பொருளை உணர்ந்து அனுபவிப்பது சுலபமாய்ப் போய்விடு கிறது.

**- கல்கி, 31.8.1947**

***''அமைச்சரே! ஆட்சி எப்படி நடக்கிறது?''***

***''அதான் எனக்கும் ஆச்சரியம்! இன்னும் எப்படி நடக்கிறது?''***

***- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்***

# தன்னை மறந்து...

நெல்லையில், திருப்புடைமருதூரில், தைப் பூசத்தில் நடப்பதுதான் தாமிரபரணி நதித் திருவிழா. அதில் என்னதான் விசேஷம்? ஒன்றுமில்லை. நாற்பது கிராமத்து மக்கள் கூட்டாகக் குளிப்பதுதான் நதித் திருவிழா. இவ்விழாவின்போது ஓவியரும், புகைப்படக் கலைஞருமான பா. கதிர் ஒரு விஷயத்தைக் கண்டடைந்து இருக்கிறார். நதிக்கும் மனிதனுக்குமான உறவின் பிணைப்பு, தன்னை மறக்கக்கூடிய மனநிலைக்குத் தன்னை உட்படுத்திக் கொள்வது, தன்னை மறந்த நிலையில் தனது குழந்தைத்தனம் வெளிப்படுவது... இதெல்லாம் இந்தக் கூட்டு நதிக் குளியலில் வெளிப்பட்டதை உணர்ந்தார். அக்காட்சிகளை, பேச்சற்ற பதிவாக இருபத்தைந்து நிமிடம் ஓடக்கூடிய குறும்படமாகப் பதிவுசெய்து இயக்கியுள்ளார் கதிர். சமீபத்தில்... தன்னை மறந்து என்ற பெயரிலான இக்குறும்படத்தை ஓவியக் கல்லூரி முதல்வர் சந்ரு மூலம் வெளியிட்டார். குறும்படத்தில் பல இயல்பான அரிய காட்சிகள் உண்டு. குளித்துக்கொண்டே ஒரு சிறுவன் நதி மணலைப் பூசிக் கொள்கிறான். காரணம் அவனும் சொல்லவில்லை; நாமும் கேட்கவில்லை. நதிக்கும் மணலுக்கும் வித்தியாசமில்லை அவனுக்கு; அவ்வளவுதான். அவனுக்கும் நதிக்கும் கூடத்தான். மனிதன் தன்னை மறக்கும் கணங்கள் வெவ்வேறானவை. ஆயினும் அவைதான் வாழ்வை இயக்குகின்றன என்கிறது இக்குறும்படம். இப்படம் வியாபாரத்துக்கானது அல்ல! நீங்கள் கேட்டால் உங்களிடம் திரையிட்டுக் காட்டுவார் கதிர்; நமது குழந்தைத் தனத்தை நமக்குக் காட்ட!



பா. கதிர்

- அமிர்தா




# பரமாத்ம சமுத்திரம்

ஜலத்தை திருஷ்டாந்தமாக வைத்து பரமாத்ம ஜீவாத்ம சம்பந்தத்தைச் சொல்லும்போது நதிகளைப் பற்றி விசேஷமாகச் சொல்ல வேண்டும். சமுத்திர ஜலம் மழையாகி அதிலிருந்து ஏரியும், குளமும், குட்டையும், கிணறும் உண்டாகின்றன. இவை மறுபடியும் சமுத்திரத்தில் கலப்பதில்லை. ஆனால், எல்லா நதிகளும் சமுத்திரத்தையே தேடி வந்து கலந்து விடுகின்றன. வடக்கே ஒரு நதிக்கு 'ஸோன்' என்று பெயர். 'சோணம்' என்றால் சிவப்பு. இந்த நதி சிவப்பான மண்வழியே ஓடி வருகிறது. ஆந்திராவில் கிருஷ்ணா நதி இருக்கிறது. 'கிருஷ்ணா' என்றால் கறுப்பு. இந்த நதி கறுப்பு மண் மீது ஓடுகிறது. கங்கை என்றால் வெளுப்பு. இதுவும் அது ஓடி வருகிற பிரதேசத்தைப் பொறுத்து ஏற்பட்ட பெயர்தான். மூன்றும் ஒரே சமுத்திரத்தில்தான் கலக்கின்றன. சிவப்பு ரஜோகுணம், கறுப்பு தமோ குணம், வெள்ளை ஸத்வ குணம். மனசானது முக்குணங்களில் எதில் பாய்கிறதோ, அதை ஒட்டி ஜீவாத்மாவின் சுபாவம் அமைகிறது. எப்படியானாலும் கடைசியில் பரமாத்ம சமுத்திரத்தில்தான் கலந்தாக வேண்டும்.

Water finds; its level - 'தொடர்புடைய நீர்ப் போக்கு ஒரே மட்டத்தில் இருக்க முயலும்' என்பார்கள். மலை உச்சியில் மழை பொழிந்து நதி உண்டாகிறது. அங்கிருந்து கீழே கன வேகமாக, ஒரே இரைச்சலோடு நதி விழுகிறது. பூமியில் ஓடும்போது அத்தனை சத்தம் இல்லை. முடிவில் சமுத்திரத்தில் கலந்த பின் சத்தமே இல்லை. அப்போதுதான் நதி தன் லெவலுக்கு வருகிறது. அதாவது லெவலுக்கு வந்தவுடன் பரம சாந்தமாகிறது. அடக்கமாக வருகிற நதியைச் சமுத்திரம் எதிர்கொண்டு சென்று வாங்கிக் கொள்கிறது. இதனால்தான் நதியின் சங்கம ஸ்தானங்களுக்குச் சிறிது தூரம் முன்னாலிருந்தே ஆற்று ஜலம் உப்புக் கரிக்கிறது. நாம் லெவலை மீறாமல், அடக்கமாகச் சென்றால், பரமாத்ம சமுத்திரம் நம்மை எதிர்கொண்டு அழைத்துப் போய், தனக்குள் அடக்கம் செய்து கொண்டு விடும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

அத்தை ஊரிலிருந்து வந்திருந்தாள். பெண்ணுக்குக் கல்யாணமாம். பத்திரிகை வைத்து நேரடி அழைப்பு.

''உமாவுக்கும் இவளுக்கும் ஆறு மாசந்தான் வித்தியாசம்.''

அம்மா அதைக் காதில் வாங்காத மாதிரி நின்றதால், அத்தை இன்னொரு தரம் சொன்னாள்.

''அவனை நம்பாதே. கட்டு இருந்தாப் போதும். சோறு, தண்ணி வேண்டாம்.''

அம்மாவின் முகம் இப்போதெல்லாம் என்ன நினைப்பு ஓடுகிறது என்று புலப்படுத்துவதில்லை.

''அவனை நீயாச்சும் திருத்தி வழிக்குக் கொண்டு வருவேன்னு பார்த்தோம்... ம்ஹூம்... உனக்கும் சாமர்த்தியம் இல்லே.''

உறவுகளோடு எந்தவிதப் போக்கு வரத்தும் ஏன் அம்மா வைத்துக்கொள்வதில்லை என்று உமாவுக்கு இப்போது புரிந்தது.

''ஏன் அத்தை... இப்ப நீங்க பார்த்திருக்கிற மாப்பிள்ளையைப் பத்தி நல்லா விசாரிச்சுட்டீங்களா?''

உமா இயல்பான குரலில்தான் கேட்டாள். அம்மாவுக்கு ஏதோ புரிய, பின்னாலிருந்து வேண்டாம்டி என்பது போல் சைகை செய்தாள்.

''நல்லா விசாரிச்சாச்சு... ஒரு கெட்ட பழக்கமும் இல்லே... அவ்வளவு ஏன்... அவரே மனசு விட்டுப் பேசினார். என்னைப் பத்தி நானே சர்டிபிகேட் தரக் கூடாது. ஆனாலும் சொல்றேன். ஆபீஸ்ல எப்பவும் ஏதாவது பெரிய மனுஷா வந்தா என்னைத்தான் அனுப்புவா. கம்பெனி கொடுக்கணும். வர்றவனுக்கு ட்ரிங்க்ஸ் பழக்கம் இருந்தா... ஹோட்டல் ரூமுக்கு வரவழைச்சுத் தரணும். முதல்ல ஒரு மரியாதைக்கு 'சிப்' பண்ணேன்... அப்புறம் இதுவே பழக்கம் ஆயிரும்னு விட்டுட்டேன்னார்.''

''ஓஹோ...'' என்றாள் உமா.

''பாரேன்... என்ன வெளிப்படையா பேசறார்னு.''

அத்தையின் முகம் பூரித்திருந்தது.

''குடிகாரன் பேச்சுன்னு ஏதோ சொல்வாங்களே... அது மாதிரி ஆயிடப் போவுது... அப்புறம் உங்க பொண்ணு அவரைத் திருத்தலேன்னு கெட்ட பேர் வந்திடப் போவுது...''

உமா பட்டென்று சொல்லிவிட்டாள்.

அத்தையின் முகம் செத்துப் போனது.

பிறகு 'கன்ளென்று' கோபம் கொப்பளித்தது.

''என்னடி பேசறே?''

''நீ விடு... ஏய் உமா... உள்ளே போடி'' அம்மா விரட்டினாள்.

''சும்மா இரும்மா... இத்தனை வருஷம்

# கிங்... க்வீன்... ஜாக்!





ரிஷபன்

நாம எப்படி இருக்கோம்னு கவலைப் படாதவங்க இப்ப வந்து புத்தி சொல் றாங்க.''

''உங்களை மதிக்க, உறவு விட்டுரக் கூடாதுன்னு வந்தேன் பாரு... எனக்கு வேணும்.''

அத்தை எழுந்து போய்விட்டாள்.

தினகர் சிரித்தான்.

''ம்ம்... அப்புறம்?''

''அப்புறம் என்ன... அம்மாவுக்கு என் மேல பயங்கரக் கோபம். என்னாலதான் அத்தை உறவு போச்சுன்னு.''

''உனக்கு ஏன் அப்படி ஒரு கோபம் வந்தது?''

''தெரியலே தினகர். ஒரு வேளை அம்மாவை அத்தை இன்சல்ட் பண்ணது



**இ**து ரீ-மேக் காலம். மற்ற மொழிகளில் பரபரப்பான வெற்றி பெற்ற படங்களை, தமிழுக்குக் கொண்டு வந்து வெற்றி பெறுவதில் சளைத்ததல்ல கோலிவுட். உலக அளவில் பல விருதுகளைத் தமது ஒளிப்பதிவுக்காக வாரிக் குவித்த சந்தோஷ் சிவன், மலையாளத்தில் இயக்கிய படம் அனந்த பத்ரம். இது கேரள அரசின் சிறந்த படத்துக்கான விருதினைப் பெற்றதோடு, தெலுங்கிலும் மொழி மாற்றம் செய்யப்பட்டு வெற்றி பெற்றது. விடுமா கோடம்பாக்கம்? ஆஞ்சநேயா புரொடக்ஷன் சார்பில் எம்.சதீஷ்குமார் தயாரிக்க, தமிழில் 'சிவபுரம்' என்ற பெயரில் மொழிமாற்றம் செய்யப்படுகிறது அனந்தபத்ரம். இயக்குவது சந்தோஷ் சிவன்தான். இந்தப் படத்தில் ஹீரோவாக பிருத்விராஜ் நடிக்கிறார். தாஜ்மஹாலுக்குப் பிறகு காணாமல் போன ரியா சென் மற்றும் காவ்யா மாதவன் இருவரும் கதாநாயகிகளாக நடிக்கின்றனர். ''இந்தப் படத்தில் இடம்பெறும் கிராஃபிக்ஸ் காட்சிகளுக்காக கண்டிப்பாக விருதுக்குத் தேர்வாகும்'' என்கிறார் எம்.சதீஷ்குமார். ''ஒரு

எனக்குப் பிடிக்காம... அப்படி பேசிட்டேனா?''

''ஊஹூம்... அதை விடவும் வேற காரணம் இருக்கணும்.''

உமா யோசித்தாள். கோபத்துக்கான காரணத்தை அறிய, மூன்றாம் மனுஷி போல, நிகழ்ந்ததை மனத் திரையில் ஓட்டிப் பார்த்தாள்.

''உனக்கு உங்க அம்மா மேலேயே கோபம் இருக்கு. இப்படி அநியாயமா ஏமாந்திருக்கக் கூடாதுன்னு.''

தினகர் நிதானமாகத்தான் சொன்னான். உமாவின் முகம் அப்படியே வாடிப் போனது.

தினகர் எப்போது நகர்ந்தான் என்று புரியவில்லை. உமாவால் மேலே பேச இயலாத மௌனம். உள்ளே குமுறல்களுடன் வெளியே அமைதி.

**அ**ம்மா பூத்தொடுத்துக் கொண்டிருந்தாள். சரமே விலைக்குக் கிடைக்கிறது. ஆனாலும், அம்மாவுக்கு உதிரிப்பூ வாங்கித் தொடுப்பதில் தனி சந்தோஷம். அந்த லாகவம் உமாவுக்கு வரவில்லை. முடிச்சு ஒழுங்காய் வந்தால் பூ விழுந்து விடும். பூ ஒழுங்காய் நின்றால் முடிச்சு தப்பிவிடும்.

''அம்மா...''

'என்ன' என்று கேட்பது போல நிமிர்ந்து, பிறகு பூத்தொடுப்பதில் கவனம் திரும்பியது.

''எந்த மாறுதலும் இல்லாம... வாழணுங்கிற நிர்ப்பந்தம் மட்டும் இருக்கிற மாதிரி... நாம வாழறாப்ல இருக்கு...''

அம்மா குனிந்திருந்ததால் என்ன உணர்வை முகம் பிரதிபலிக்கிறது என்று புரிபடவில்லை.

''அபத்தமா இருக்கும்மா...''

''இப்ப என்ன செய்யணும்?''

''எங்கேயாவது ஒரு பத்து, பதினைந்து நாள் போயிட்டு வரலாம். ஆனா, திரும்ப இதே வாழ்க்கைக்குத் திரும்பணும். வேற ஊருக்கு மாற்றல் வாங்கலாம். அதுவும் ஆறு மாசம் இருந்தாப் பழகி... அலுப்பு வந்துரும்...''

'நீயே யோசித்து முடிவு சொல்' என்கிற மாதிரி அம்மாவின் மௌனம் இருந்தது.

''செத்துப் போயிடலாம்னுகூடத்

நாகமாணிக்கத்தை, கொடிய மந்திரவாதி ஒருவன் அடையத் துடிப்பதும், அதனை பிருத்விராஜ் எப்படித் தடுக்கிறார் என்பதும்தான் கதை. ஆனால், கிராஃபிக்ஸில் உலக ஜால வித்தை காட்டியிருக்கிறோம். தமிழில் கண்டிப்பாக இந்தப்படம் விருதினை வென்று பரபரப்பாகப் பேசப்படும்'' என்கிறார் சந்தோஷ் சிவன்.

- மகிமை



தோணுது...''

சொன்னபிறகு உமா நாக்கைக் கடித்துக் கொண்டாள். சட்டென்று அந்த வரி விடுபட்டுவிட்டது. எய்த அம்பு... இனித் திரும்பாது.

அம்மா அழுதிருக்க வேண்டும். பூவுக்குத் தெளித்த நீருடன் இரண்டு சொட்டுக் கண்ணீரும் தெறித்தது. பாதி தொடுத்ததோடு எழுந்து போய்விட்டாள்.

பக்கத்து வீட்டாருடன் அவ்வப்போது புன்னகை பரிமாறியதுடன் சரி. வேறு விதமான உரையாடல்களோ, விசேஷ நாட்களில் இனிப்பு வழங்கிப் பெறுவதோ இல்லை.

இன்று வெளியில் வந்து நின்ற உமாவைப் பார்த்துச் சிரித்ததோடு நிற்காமல், நெருங்கியும் வந்து நின்றாள் பக்கத்து வீட்டுப் பெண்மணி.

''எங்க வேலை பார்க்கிறே?''

சொன்னாள்.

''என்ன சம்பளம் வரும்?''

லேசாய் எரிச்சல் வந்தது.

''எங்க குடும்பத்துக்குப் போதும்.''

''அதுக்கில்ல... உனக்குக் கல்யாணம் ஆயிருச்சின்னா... உங்க வீட்டுக்கு உன்னால எதுவும் பணம் தர முடியுமான்னு...''

''நீங்க ஏன் அதுக்குக் கவலைப் படறீங்க?''

''பின்னே... இத்தனை வயசாகியும் உன்னைக் கட்டிக் கொடுக்கணும்னு நினைக்காம... கம்முனு இருக்காங்களே... கட்டிக் கொடுத்துட்டா உன் சம்பளப் பணம் போயிரும்னுதானே... வளர்ந்த பெண்ணைப் புருஷனோட பார்க்கணும்னு பொறுப்பு வேணாமா?''

எவ்வளவுதான் அண்டை அயலாருடன் விலகி இருந்தாலும், நம்மைக் கவனிப்பதும் நம் மீதான விமர்சனங்களுடன் அவர்கள் வாழ்வதும் தவிர்க்க முடியாது போலும் என்று, அந்த நிமிடக் கோபத்திலும் உமாவுக்குத் தோன்றியது.

தினகரின் பழக்கம் கற்றுத் தந்த உணர்வு அலசல் இது.

'நாம எப்பவும் தெளிவா இருக்க முடியும் உமா... அதனால என்ன பயன்னு நினைக்கறியா... மத்தவங்களை நாம மாத்த

## பத்து இயக்குநர்கள் ஒன்றாக...

"இனிமேல் நான் இயக்கும் படங்கள்ல, ஹீரோவா கண்டிப்பா ஒரு இயக்குநர்தான் நடிப்பார். இப்ப இருக்கற எந்த ஹீரோகிட்டயும் போய் கைகட்டி நிற்க மாட்டேன்." சற்றே கசப்புணர்வோடு பேசுகிறார் 'மாயாண்டி குடும்பத்தார்' படத்தை இயக்கும் ராசு மதுரவன்.

"யுனைடெட் ஆர்ட்ஸ் நிறுவனம் தயாரிக்கும், 'மாயாண்டி குடும்பத்தார்' படத்தோட ஸ்பெஷலே, ஹீரோ முதல் வில்லன் வரை அனைவரும் இயக்குநர்கள்; ஒருவர்கூட தொழில்முறை நடிகர்கள் கிடையாது" என்கிறார் மதுரவன். ஏனிந்த முடிவு? கேட்டால், "இந்தக் கதையை ரெடி பண்ணிட்டு ஒரு நடிகர்கிட்ட கதை சொல்றதுக்காக நேரம் கேட்டேன். அவர் இப்பதான் தூங்கறார், எழுந்திருச்சிருக்கார், குளிக்கறார்னு பதில் வந்ததே தவிர, ஒருமுறை கூட அவரிடமிருந்து நேரடியாக எந்தப் பதிலும் இல்லை. நொந்துபோய் என் மாப்பிள்ளை இயக்குநர் தருண்கோபியையே ஹீரோவாக நடிக்க வைத்துவிட்டேன். மீதமுள்ள கேரக்டர்களுக்கு மற்ற இயக்குநர்களைப் பிடித்துப் போட்டேன். இந்தப் படத்தில் சீமான், மணிவண்ணன் உட்பட மொத்தம் பத்து இயக்குநர்கள் நடிக்கிறார்கள். தருண் கோபிக்கு ஜோடியாக தமிழரசி, பூங்கொடி என இரண்டு கதாநாயகிகள் நடிக்கின்றனர்" என்கிறார்.


* 'மாயாண்டி குடும்பத்தார்' படத்தில்...

இப்படத்தின் துவக்க விழாவுக்கு 63 இயக்குநர்கள் வந்து வாழ்த்தியது குறிப்பிடத்தக்கது.

- மகிமை

நினைக்கறது வீண் வேலை... நம்மால அது முடியாத காரியமுங்கூட. நம்ம உணர்வைச் சரியான கோணத்துல பழக்கிட்டோம்னா... எப்பவும் நிதானமா இருக்கலாம். குறைந்த பட்சம் நம்மை மத்தவங்க ஆளுமைப்படுத்த முடியாது.'

உமா எதுவும் பதிலளிக்காமல் உள்ளே வந்துவிட்டாள். அம்மாவும் இந்த உரையாடலைக் கேட்டிருக்கவேண்டும். இவள் வரும்போது அம்மா வழியில் நின்றிருந்தாள்.

குளத்தில் எறியப்பட்ட கல் அலை எழுப்பாமல் விடுவதில்லை. உள்ளூர அடிமட்டத்தில் நிச்சலனமாய் இருந்தாலும் புறத்தில் தளும்பித்தான் ஆக வேண்டும் என்றும் உமாவுக்குத் தோன்றியது.

தினகர் குட்மார்னிங் சொன்னதும் திருப்பிச் சொன்னாள்.

"நைட் சரியாத் தூங்கலையா?" என்றான்.

"ம்..."

"இன்னிக்கு லீவு போட்டிருக்கலாமே."

"ஸ்டேட்மெண்ட் முடிக்கணும்."

"ஹெல்ப் பண்ணவா?"

"இல்லே... நான் பார்த்துக்கறேன்."

"ஒக்கே..."

போய்விட்டான். அவனிடம் இந்தக் குணம் அவளுக்குப் பிடிக்கும். பிறர் போல மேலே மேலே கேள்விகள் கேட்டு இம்சிப்பதில்லை.

வேலை திருப்தியாய் முடிந்ததும் அரை மணி ஓய்வு கிடைத்தது. மேனேஜர் அவளைப் பாராட்டிச் சொன்னதும் பிடித்திருந்தது. உள்ளூர வந்த பெருமிதம் யோசிக்கவும் வைத்தது.

'வார்த்தைகள் வருத்தமும், சந்தோஷமும் தர முடியுமானால்... எப்படி விலகுவது...?'

தினகரிடம் பேச வேண்டும் போலிருந்தது.

**(தொடரும்)**

''ஏன் உன் கணவர் எதிலுமே நிச்சய மில்லாம இருக்கார்...?''

''ஏன்னா அவர் வானிலை ஆய்வு மையத்திலே வேலை பார்க்கிறார்...''

- ஏ. பாலகிருஷ்ணன்





''நெய்யை 'டின் டின்'னாக சாப் பிட்டுட்டு, கொழுப்பால உடம்பைக் கெடுத்துக்கிட்ட குடும்பம் அது!''

''டின்'னு கெட்ட குடும்பம்ன்னு சொல்லு!''

- வெ. சீதாராமன்



# ரீடிங் சார்ஜ் Rs-50/-

''ஏன் முதலாளி... இப்ப வந்தவர், 'கட்டிங், ஷேவிங்' எதுவும் பண்ணிக்காம, அம்பது ரூபா கொடுத்திட்டுப் போறார்...''

''அது, அவர் தினமும் இங்கே வந்து எல்லாப் பத்திரிகைகளையும் படிக்கறதுக்கான, மாச 'ரீடிங்' சார்ஜ்!''

- வெ. சீதாராமன்

''உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே... உங்க பேரு?''

'' 'பார்த்தசாரதி'ங்க!''

- குலசை நஜ்முதீன்.



# 'ஆயிர'த்தைக் காத்த

ஜெர்மனியின் முன்னேற்றத்துக்குத் தடை–எது? அதை ஹிட்லர் கண்டு கொண்ட காலகட்டம். தன் நண்பர்களிடம், 'தயவுசெய்து கண்ணைத் திறந்து, உன்னைச் சுற்றி நடப்பதைப் பார். நீ பேசாதே. அவர்கள் பேசுவதைக் கவனி. ஆயிரம் காரணங்கள் கிடைக்கும்.

இங்கே அதிகம் படித்தவர்கள் யார்? அரசாங்க அலுவல்களில் அதிகம் இருப்பவர்கள் யார்? மருத்துவர்களாக இருப்பவர்கள் யார்?

ஜெர்மானியர்கள் யாராவது ஏதாவது சிறுதொழில் தொடங்க வேண்டுமானால் கடனுக்கு யாரிடம் கை நீட்டுவார்கள் தெரியுமா?

'யூதர்கள்'

நான் சொல்வது உனக்கு அதிர்ச்சியளிக்கக்கூடும். ஆனால் உண்மை. எல்லாவற்றையும் அசலாகப் பார்த்த பிறகே நான் இந்த முடிவுக்கு வந்தேன். ஜெர்மானிய மக்கள் நலமுடன் வாழ யூதர்களை அழிக்க வேண்டும்.'

ஜெர்மனியின் ஆதார சக்தியாக ஹிட்லர் மாறுவதற்கு முன்பே உதித்துவிட்ட எண்ணம் இது. ஆட்சி கைக்கு வந்ததும் அதிகாரபூர்வமாகவே உத்தரவிட்டார்.

ஆஸ்கர் ஷிண்ட்லர் ஒரு ஜெர்மானியர். தொழிலதிபர். செப்டெம்பர் 1939ல் ஹிட்லர் போலந்தை ஆக்கிரமித்தபோது பிற தொழிலதிபர்கள் போலவே அவரும் மகிழ்ந்தார். எப்படியும் யுத்த தேவைகளுக்காகத் தளவாடங்கள் நிறைய உற்பத்தி செய்ய வேண்டியிருக்கும். விழிப்புடன் இருந்தால் கொள்ளை லாபம். எதிர்பார்த்ததைப் போலவே அவர் தொழிற்சாலைக்கும் ஆர்டர் வந்தது. ஆயிரத்துச் சொச்ச யூதர்களைப் பணியில் இணைத்துக்கொண்டார். அவர்களுக்குக் குறைவான சம்பளம் கொடுத்தால் போதுமே! செய்தி நாஜிக்களுக்குப் போய்ச் சேர்ந்தது. நியாயமில்லை என்றது மேலிடம்.




ஒரு குழு உடனடியாக ஷிண்ட்லரைச் சென்று சந்தித்தது. 'நாங்கள் கேள்விப்பட்டது உண்மையா?' ஷிண்ட்லர் வெடிப்பது போல நடித்தார். 'நான் உண்மையான ஜெர்மானியன் அல்லவா? என் உடலில் ஓடுவது உயர்குடி ரத்தம் அல்லவா? இப்படி அவமானப்படுத்தலாமா?'

'மன்னிக்கவும்' என்று சொல்லிக் கிளம்பினார்கள். மீண்டும் வந்தார்கள்; ஆதாரத்துடன். ஆனால் அதற்குள் ஷிண்ட்லர் அந்த ஆயிரம் யூதர்களையும் வேறு இடத்துக்கு அனுப்பி வைத்திருந்தார்.

இந்த முறையும் ஏமாற்றம்தான். ஆனால் அதிகாரிகள்

# ஒன்று!'

சளைக்கவில்லை. மிரட்டினார்கள்; பிடித்துக்கொண்டு போய் காவலில் வைத்துப் பார்த்தார்கள்; மசிவதாக இல்லை ஷிண்ட்லர்.

அந்த ஆயிரம் யூதர்களை ஷிண்ட்லர் எப்படிக் காப்பாற்றினார் என்பதுதான் Thomas Keneally என்னும் ஆஸ்திரிய எழுத்தாளரின் Schindler's Ark நாவல். அக்டோபர் 1982ல் வெளிவந்த இந்தப் புத்தகத்தை வாசித்தவர்கள் அனைவரும் திடுக்கிட்டுப் போனார்கள்.

ஸ்டீவன் ஸ்பீல்பெர்க் இந்தப் புத்தகத்தை Schindler's List என்னும் பெயரில் படமாக எடுத்தபின், ஏழு அகாடமி விருதுகளை அள்ளிச் செல்லக் காரணமான இந்நூல் புத்தக வரலாற்றில் ஒரு மைல் கல் எனலாம்.

■ மருதன் ■



# எஸ்.ஷங்கரநாராயணன்

# கவிதைகள்



ஐவிரலில் ஒன்றைத் தொடு
பட்டாம்பூச்சியே
பூங்கொத்தை நீட்டும் மரம்



கண் மூடிய தவத்தில்
துறவி
பூத்துக் குலுங்கும் மரம்



பயணிகள் நிழற்குடை
மேல் அமரும் பறவையே
கீழே வா நிழலுக்கு



போதி மரம்
உதிர்க்கும் இலை
புத்தனுக்குத் தாடி

இளவேனில் எழ
மீண்டும் துளிர்க்கும் மரம்
தலை தடவும் தாத்தா

மரத்தை வெட்டி மேஜை
மேஜை மேல்
பூத்தொட்டி

# ஹைக்கூ வரியா

மரம் உதிர்த்த சருகுகள்
பெருக்கிவிட்டு அமர்கிறாள்
மிட்டாய் விற்கும் கிழவி

மலைமேலமர்ந்த
முருகக் கடவுள்
மூட்டுவலி அறியாதவர்

# ஆனந்த நடனம்!

த.கி.நீலகண்டன்

உலகக் கலைப் படைப்புகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போன்ற உன்னதமான கலைப்படைப்பு நடராஜர் வடிவம். கலை ரசிகர்கள் வாழும் இடங்களில் எல்லாம் நடராஜரைப் பார்க்கலாம். விமான நிலையம், அலுவலகம், நட்சத்திர ஹோட்டல்கள் என்று எங்கும் நிறைந்த வடிவம். அது வெறும் கலைவடிவமா என்ன? ஆழமான தத்துவப் பின்னணியும் அசைக்க முடியாத பக்திப் பின்னணியும், அறி



வியல் பின்னணியும், இசை, நடனம் போன்ற கலைகளின் ஆதார அமைப்பும் நடராஜர் வடிவத்துக்கு உண்டு.

இந்தப் பேரண்டத்தின் இதயஸ்தானம் சிதம்பரம் என்கிற ஸ்தலம். அங்கு எல்லையற்ற ஆனந்தத்துடன் திருநடம்புரியும் நடராஜப் பெருமான் உலக இயக்கத்தின் உயிர்த் துடிப்புக்கு ஆதார சக்தியாய் விளங்குபவர். உலகில் எத்தனையெத்தனை நடராஜ வடிவங்கள் இருந்தாலும், அவை கோயில்களில் பூஜைக்குரியனவாக இருந்தாலும் சரி, காட்சியகத்தில் காட்சிப் பொருட்களாக வைக்கப்பட்டிருந்தாலும் சரி, அத்தனை வடிவங்களுக்கும் மூல வடிவம் சிதம்பரத்தில் விளங்கும் பெருமானே. படிப்பு, எழுத்து அறியாத எளியவர் முதல் பிரும்மஞானம் பெற்று பக்குவப்பட்ட தவசீலர்கள் வரை கோடானுகோடி மக்களின் அபிமானமூர்த்தி ஆனந்த நடராஜ மூர்த்தி.

நடராஜரின் வடிவம் பஞ்சாட்சர மந்திரத்தின் ஸ்தூல வடிவம். ஓம் என்ற பிரணவமே திருவாசியாக, உடுக்கை, வீசுகரம், அபயகரம், தீயகல், முயலகன் - இவை பஞ்சாக்ஷரத்தின் மற்ற அக்ஷரங்களாக தியானிக்கப்படுகின்றன. ஐந்து தொழில்களான படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியவற்றையும் நடராஜ வடிவத்தில் குறியீடாகக் காணலாம். ஒலியின் பிறப்பிடமான உடுக்கை படைத்தல் தொழிலையும், அபயகரம் காக்கும் தொழிலையும், தீ அகல் அழிக்கும் தொழிலையும், ஊன்றிய பாதம் மறைத்தல் தொழிலையும், தூக்கிய திருவடி அநுக்கிரக சக்தியான அருளல் தொழிலையும் குறிக்கின்றன. ஐந்து தொழில்களையும் ஒருவராகவே இயற்றும் நடராஜப் பெருமா

ளின் தாண்டவம் 'பஞ்ச கிருத்ய பரமானந்த தாண்டவம்' என்று போற்றப்படுகின்றது.

தில்லையில், பதஞ்சலி, வியாக்ரபாதர் ஆகிய முனிவர்களுக்காக, தை மாதம் பூச நட்சத்திரம் வியாழக்கிழமை சித்தயோகம் கூடிய நன்னாளில் பகல் நேரத்தில் நடனக் காட்சி அருளிய பெருமான், இன்றும் அந்த மாறாத புன்னகையுடன் நின்று நடனம் புரிகிறார்.

வலது திருப்பாதத்தை ஊன்றி இடது திருப்பாதத்தை எடுத்து ஆடும் வடிவம். நான்கு திருக்கரங்கள். மேலிரண்டு கரங்களில் உடுக்கையும் தீயகலும் ஏந்தியிருக்க, வலது கீழ்க்கரம் அபய முத்திரையுடன் விளங்க, இடது கீழ்க்கரம் மார்புக்குக் குறுக்கே வீசியவண்ணம், ஆடும் கோலத்தில் காட்சி தரும் பெருமான். ஊன்றிய பாதத்தின் கீழ் ஆணவத்தின் குறியீடாய் விழுந்து மிதியுண்டு கிடக்கிறான் முயலகன் என்ற அசுரன். நடராஜமூர்த்தியை எளிமையாக சுருக்கமாகச்



24

சொல்வதானால் அவ்வளவுதான். ஆனால் அவ்வளவுதானா! வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத பேரழகு வாய்ந்தவன் அல்லவா அவன்!

ஊன்றிய பாதத்தில் உறுதிமிக்க எலும்புகள், தசைகள்! கணுக்காலில் உள்ள மூட்டு எலும்பு புடைத்தெழுந்திருப்பதில், கீழே மிதியுண்டிருக்கும் முயலகன் படும் அவதி தெரியும். குப்புறக் கிடக்கும் அவனது புடைத்த வயிறு, அழுத்தம் தாங்காமல் பிதுங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். மனிதகுலத்தை மாயையில் ஆழ்த்தி உலக விவகாரத்தை நடத்தும் திரோதான (மறைத்தல்) சக்தியே நடராஜப் பெருமானின் ஊன்றிய பாதம்.

ஆட எடுத்த இடதுபாதம் அநுக்கிரக சக்தியாய் விளங்குவது. இடது முழந்தாளை இடுப்புவரை உயர்த்தி வலது காலுக்குக் குறுக்கே வீசி ஆடும் தோற்றமே நடராஜப் பெருமான் வடிவின் முக்கிய அம்சம். பெருமானின் மற்ற அங்கங்களைவிட தூக்கிய திருவடிக்கே முதலிடம். 'குஞ்சிதபாதம்' என்று வடமொழியில் இதற்குப் பெயர். ஸ்தோத்திரங்களிலும், பாடல்களிலும், கீர்த்தனைகளிலும் முதன்மை ஸ்தானத்தில் வைத்துப் போற்றப்படுவது தூக்கிய திருவடியே! இந்தக் குஞ்சிதபாதத்தின் தரிசனம் பெற்றவர்களுக்கு, கனவிலும் கூட கால பயம் இல்லை என்று உறுதியாகச் சொல்கிறது ஒரு பாடல்.

சிதம்பரத்தில் உள்ள நடராஜப் பெருமான் வடிவத்தில் ஒரு வித்தியாசமான அம்சம் உண்டு. முன்னிருந்து பார்த்தால், கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பது போலத் தோன்றும். பின்னால் இருந்து பார்த்தால் ஒரு காலைத் தூக்கி ஆடுவது போலத் தெரியும். பிருஷ்ட பாகம் சற்றுத் தாழ்ந்தே இருக்கும். பின்னழகைக் காண வாய்க்கும்போது (சுவாமி வீதி உலாவுக்கு வருகையில்) இதை அவசியம் கவனிக்க வேண்டும். அகன்ற மார்பு அழகாகக் குறுகி சிறுத்த இடையாகி இரு கால்களாகப் பிரிந்து, ஒன்று ஊன்றியும் மற்றது உயரத் தூக்கியும் ஆடும் கோலத்தில் முன்னழகும் பின்னழகும் ஆதியும் அந்தமும் இல்லாத ஆற்றலின் அழகு வடிவம்! இறையுணர்வும் கலையும் ஒரே தத்துவத்தின் இருபுறங்கள் என்று உணர்த்துவது போலவும், இவற்றுள் ஒன்று இன்றி மற்றது இல்லை என்பது போலவும் தோன்றும்.

'அஞ்சேல்' என்று அபயம் தரும் அபய ஹஸ்தம், அப்பர் சுவாமிகளுக்கு ''என்று வந்தாய்?'' என்று க்ஷேமலாபம் விசாரிப்பது போலக் காட்சி அளித்ததாம்! நம்மையும் அப்படித்தான் நலம் விசாரிக்கிறார். ''அந்த வலது கரத்தின் மணிக்கட்டில் பின்னிக் கொண்டு படம் எடுத்தாடும் பாம்பின் மீது நீர் ஒரு கண் வைத்துக் கொள்ளும் ஐயா'' என்று சொல்லலாம் போல் இருக்கிறது. அந்தப் பாம்பின் நெளிவில்கூட ஒரு லயம் இருப்பதாக நமக்குப் புலப்படுகிறது!

**கோனேரிராஜபுரம், நெல்லை, கீழ்வேளூர், பாத்தூர், சிவபுரம்... ஆகிய தலங்களில் விளங்கும் நடராஜப் பெருமானின் வடிவங்கள் தனித்தன்மை வாய்ந்தவை**

மார்பின் குறுக்கே வீசிய வண்ணம் நீண்டு, கீழே விளங்கும் தூக்கிய திருவடியை நமக்குக் காட்டுவது போல இருக்கிறது இடது கீழ்க்கரம். ''உடுக்கை ஒலிக்கும் கரம் படைத்தல் தொழிலிலும், அபய ஹஸ்தம் காக்கும் தொழிலிலும் அனலேந்திய கை அழிக்கும் தொழிலிலும், முனைந்து இருக்கின்றன. விசேஷமாக

உனக்கு ஏதேனும் ஆகவேண்டியிருந்தால் அதோ அங்கே போ! உன் விண்ணப்பங்களை எல்லாம் ஏற்றுப் பரிசீலனை செய்யும் டிபார்ட்மெண்ட் அதுதான்'' என்று அநுக்கிரகம் செய்யும் தூக்கிய திருவடியிடம் நம்மை ஆற்றுப்படுத்துகிறது இடது கீழ்க்கரம். பெருமானுக்குத் தேன் அபிஷேகம் செய்யும்போது, அது அவரது முகத்தில் வழிந்து, மூக்கு நுனி வழியே வீசிய கரத்தில் விழுந்து, அதன் விரலில் வழிந்து தூக்கிய திருவடியின் மேல் விழுந்து, இடதுபாதத்தின் கட்டை விரல் நுனி வழியே கீழே நூல்பிடித்தாற் போல் இறங்க வேண்டும். சிற்ப சாஸ்திரப்படி உன்னதமாக அமைந்த உருவம் அதுதான்! தில்லை நடராஜப்பெருமானின் வடிவில் இந்த அற்புதத்தைக் காணலாம்.



சற்றே வலப்புறம் சாய்ந்திருக்கும் திருமுகம். அதில் ஒளிரும் வசீகரமான புன்னகை. மூடிய விழிகளிலும் பெருகிப் பாயும் கருணை வெள்ளம். 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில், குமிண் சிரிப்பும்' என்ற அப்பர் சுவாமிகளின் வாக்கு நம் நெஞ்சை நிறைக்கிறது. குமிண் சிரிப்பு என்கிற பதப்பிரயோகத்தின் விசேஷமான அர்த்தம் நமக்குப் புரிந்துவிடுகிறது.

மற்ற நாட்களில் காணக் கிடைக்காத காட்சிகள், பெருமான் அபிஷேகம் கொள்ளும் வருடத்தின் ஆறு நாட்களில் காணக் கிடைக்கின்றன. வேலைப்பாடுகள் நிறைந்த விரித்த சடையாக அல்லாமல் பனித்த சடையுடன் விளங்குகிறார் பெருமான். அழுந்த வாரிய குழற்கற்றை. குளித்த பிறகு உலர்வதற்காகப் பிரித்து விடும் கேசபாரத்தில் இருந்து நாலு இழைகள் பிரித்து எடுத்து பின்புறம் கோதி முடிந்திருப்பது போல் முடிந்திருக்கிறார். சிரசின் முன்புறத்தில் கொக்கு இறகு, ஊமத்தைப்பூ, வில்வப்பூ, கங்கை, சந்திரகலை ஆகியவை அணிசெய்ய, தில்லைவாழ் அந்தணர்களைப் போல இடதுபுறம் ஒரு சிறு குடுமியும் தென்படுகிறது.

கால்களில் தண்டையும் சலங்கையும் விளங்க, புலித்தோல் கச்சம் இறுகக் கட்டி, சலங்கைகள் கோத்த அரைஞாண் அணிந்து, கைகளில் கடகமும், விரல்களில் மோதிரங்களும், காதுகளுள் ஒன்றில் பனை ஓலைத் தோடும் மற்றதில் மகரகுண்டலமும் விளங்க, எளிமையான ஆபரணங்கள் பூண்டு எழிலார்ந்த கோலத்தில் களிநடம் புரிகிறான் கூத்தப்பெருமான்!

கோனேரிராஜபுரம், நெல்லை, கீழ்வேளூர், பாத்தூர், சிவபுரம் ஆகிய தலங்களில் விளங்கும் நடராஜப் பெருமானின் வடிவங்கள் தனித்தன்மை வாய்ந்தவை. ஆனால் வேறு எங்கும் காண முடியாத அளவு கவர்ச்சியும், அழகும், ஆகர்ஷண சக்தியும் கொண்டு விளங்குவது, தில்லையிலே விளங்கும் கனகசபாபதியின் எல்லையற்ற அருள் வடிவமே! அதற்காகவே மனிதப் பிறவியை வேண்டிப் பெறலாமே என்கிறார் அப்பர் சுவாமிகள்.

**(நிறைந்தது)**

## கல்லூரிச் சாலை



"Shankarlal Sundarbai Shasun Jain College for Women" மாணவிகள் பொங்கல் கொண்டாட்டத்துக்காகத் தயாராகிக் கொண்டிருந்த ஒரு சுபமுகூர்த்த சுபவேளையில் நாம் அங்கே நுழைய, ''பொங்கலுக்குப் பொங்கல் செஞ்சு கொண்டாடுவோம். ஆனால் தீபாவளிக்கு தீபாவளி செஞ்சா கொண்டாடுவோம்?'' என்ற மொக்கையோடு வரவேற்றார் வி. திவ்யா.

''காலேஜுக்குள்ள நுழைஞ்சது ஒரு குத்தமா?'' என நாம் ஃபீல் ஆக, தேற்றியவாறு,

''சரி... சரி... நாங்க கேள்வி கேட்கிறோம். நீங்களே பதில் சொல்லுங்க'' என்று கருணை காட்ட, அப்பாவியாய்த் தலையாட்டினோம்.

''பொங்கலுக்கும் இட்லிக்கும் என்ன வித்தியாசம்?'' எனக் கேட்க, அறுசுவை அரசு நடராஜன் ரேஞ்சுக்கு நாம் யோசிக்க, பொறுமையிழந்து அவர்களே, ''பொங்கலுக்கு லீவு கிடைக்கும். இட்லின்னா லீவு கிடைக்குமா?'' என டெரர் கொடுத்தனர்.

'வேணாம் வலிக்குது' என்பது போல் பார்க்க, அடுத்த கேள்வியைப் போட்டனர். ''பொங்கலுக்கும், செங்கலுக்கும் என்ன வித்தியாசம்?'' திருதிருவென விழிக்க, ''ஒரே ஒரு எழுத்துதான்!'' என அவர்களே பதிலளிக்கவும், ஜல்லிக்கட்டில் பிடிபட்ட காளை போல் மிரள மிரள தப்பிக்க வழி பார்த்தோம்.

''சரி... சரி... பொங்கல் மொக்கை போதும்'' எனத் திருவாய் மலர்ந்து களத்தில் குதித்தார் வரலட்சுமி.

''இதைக்கேளுங்க. நல்ல கவனமா

# இயர்-ப்ராமிஸ்!





இருந்தும் யானையால பாவம் பழத்தைச் சாப்பிட முடியலியாம். ஏன்னா ரெண்டும் வேற வேற சேனல்ல இருந்ததாம்...'' என்று சொல்லி சூப்பர் மொக்கை போட்டு க்ளாப்ஸ்களையும் ''ஞானப்பழமே'' என்ற பாராட்டு மொழிகளையும் அள்ளிக் குவித்த வரலட்சுமியைத் தொடர்ந்து, சிவமாதுஸ்ரீ, ''இந்த வருஷப் புத்தாண்டு உறுதி மொழியா எங்கப்பாகிட்ட பாக்கெட் மணியே கேட்கப் போறதில்லைன்னு ஒரு முடிவெடுத்திருக்கேன்...'' எனவும், ''ஏன் டைரக்டா கேட்காம நீயே எடுத்துக்கலாம்னு தானே இருக்க?'' என அவரிடம் அபர்ணா கேட்க, ''நீ வேற பாக்கெட்டிலிருந்து எடுக்காம இனி ஷெல்ஃப்லேருந்து எடுத்துட வேண்டியதுதான்னு சொல்ல வந்தேன்'' என மணியான விளக்கம் கொடுத்தார்.

கேட்டுக்குங்க... ஒரு யானைக்குப் பக்கத்துல ஒரு வாழைப்பழம் இருந்துதாம். ஆனாலும், யானை அந்த வாழைப்பழத்தைச் சாப்பிடலியாம். ஏன்னா அது பிளாஸ்டிக் பழமாம். இன்னொரு முறை அதே யானைக்குப் பக்கத்துல நிஜமான பழம் இருந்தும் யானை சாப்பிடலியாம். ஏன்னா, இது பிளாஸ்டிக் யானையாம். சரி, இந்த முறை நிஜமான யானைக்குப் பக்கத்துல நிஜமான பழம் இருந்தும் யானை பழத்தைச் சாப்பிடலியாம். ஏன்னா, யானை டி.வி.க்குள்ளேயும், பழம் வெளியிலயும் இருந்துதாம்.''

''யப்பா இப்பவே கண்ணைக் காதை எல்லாம் கட்டுதே''ன்னு வந்த கோரஸுக்குச் செவிசாய்க்காமல், தொடர்ந்தார் வரலட்சுமி.

''இந்த முறை யானையும் டி.வி.ல இருந்தது. வாழைப்பழமும் டி.வி.யிலேயே

''என்னோட புது உறுதிமொழியைக் கேளுங்க... இந்த வருஷத் தொடக்கத்திலிருந்தாவது படிக்க ஆரம்பிக்கலாம்னு இருக்கேன்...'' ''எதை? பாடப் புத்தகங்களையா?'' என வந்த எதிர்க்கேள்விக்கு, ''சேச்சே, அப்படித்தான் வருஷா வருஷம் நினைப்பேன்... ஆனா அது என்னமோ தெரியலை என்ன மாயமோ தெரியலை. அதுக்கு ஒண்ணுமே ஆவறதில்ல'' என்றார் விசாலாக்ஷி.

''என்னோட புது உறுதிமொழி இதுதான்... இனி உறுதிமொழியே எடுக்கப் போறதில்லைங்கறதுல ரொம்ப உறுதியா இருக்கேன்'' என்றதும், ''இந்த உறுதிமொழியிலாவது நீ உறுதியா இருக்கியான்னு பார்ப்போம்''ன்னு மாணவிகள் கலகலக்க, அங்கே சந்தோஷப் பொங்கல் பொங்கியது.

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **குமார்**



''உங்க ஹீரோயின் 'விம்' மாதிரியா, எப்படி?''

''கொடுத்த பாத்திரத்தை பளிச்சுன்னு செய்வாங்க!''

- வெ. சீதாராமன்



''நீங்க உங்க மனைவிகிட்டே ஆறு மாசமாப் பேசவே இல்லைன்னுதான் விவாகரத்து கேக்கறாங்க. ஏன் நீங்க பேசலை?''

''அவங்க பேச்சை நிறுத்தினாத் தானே...!''

- மதுரை பால. கோவிந்தராஜ்.



''உன் பெண்டாட்டிக்கு எதிரா உன்னால எதையும் 'சாதிக்க' முடியாதா?''

'' 'மௌனம்' சாதிக்க முடியுமே!''

- வெ. சீதாராமன்

# மௌன சாதனை!



''உங்க கம்பெனியில எத்தனை பேர் வேலை செய்யறாங்க?''

''ம்... என்ன பாதிப் பேராவது செய்வாங்கன்னு நினைக்கிறேன்...!''

- மதுரை பால. கோவிந்தராஜ்

# நீ வாழ்த்தது கரப்பு

(கதவைத் திறந்த கண்ணன் வாசலில் ஓவியமாக நிற்கும் பெண்ணைப் பார்த்து ஓணானாக விழிக்கிறான்)

**அபர்ணா:** மிஸ்டர்! செகரட்டரி இருக்காரா? அவரோட பேசணும்.

**கண்ணன்:** என்ன விஷயம்? அப்பா அசந்து தூங்கறார்.

**அபர்ணா:** காலை பத்து மணிக்குக் குறட்டையா? அதான் நம்ம குடியிருப்பே தூங்கி வழியறது. ரெண்டு நாளா எங்க மாடிப்படி லாண்டிங்லே கரப்பு ஒண்ணு செத்துக் கிடக்கு. இன்னும் பாடியை யாரும் எடுக்கலே. வாட் ஈஸ் திஸ்?

**கண்ணன்:** கண்ணீர் அஞ்சலி போஸ்டர் அச்சடிக்கக் குடுத்து உறவுக்காரங்களுக்குச் சொல்லி அனுப்பியிருப்பார். வந்த உடனே நல்லடக்கம் பண்ணிட்டாப் போறது.

**அபர்ணா:** மிஸ்டர்! கரப்போட சாதி ஜனங்க எல்லாம் உங்க ஃபினாட்டிலே தான் கூட்டுக் குடும்பமா பெருகி அண்டை ஃபிளாட்டுகளுக்கு வருகை தந்திண்டு இருக்காங்க. ஓக்! அமரரான கரப்புக்கு தலை தெவசம் நிதி வர்றதுக்குள்ளே இறுதிச்சடங்குகளைச் செய்யச் சொல்லிடுங்க. இல்லாட்டி இந்த மாத மெயின்டனென்ஸைக் குடுக்க மாட்டோம். ஆமா!

(கண்ணன் அதிரடியாக டூ வீலரில் அபார்ட்மெண்டுக்குள் நுழைகிறான்)

**அபர்ணா:** ஹலோ! ரிப் வான் விங்கிள், கும்பகர்ணனுக்கு சவாலா உங்கப்பா இன்னும் தூங்கிண்டு இருக்கிறார் போலிருக்கு. கரப்பு இன்னும் கவிழ்ந்த கண்டெயினர் லாரியா கிடக்கிறதே.

**கண்ணன்:** கரப்பை நீங்க சீப்பா எடைபோடக் கூடாது. கல் தோன்றி மண் தோன்றா காலத்துக்கு முன் தோன்றிய மூத்த பூச்சி அது. மில்லியன் வருஷங்களா பூமியிலே கத்திரிக்கோல் மீசையோட ஊர்ந்து, பறந்து வாழ்ந்து வருது. அணுகுண்டு வீசப்பட்டாலும் கரப்புகள் அழியாதாம். ஆயுசு கெட்டியாம். பெண் கரப்புகள்...

**அபர்ணா:** ஸ்டாப் இட். நீங்க டிஸ்கவரி சேனல் ஸ்க்ரிப்ட் ரைட்டரா? இன்னும் கரப்பை எடுக்கலியே? அமரர் ஊர்திக்காக வெயிட் பண்ணறீங்களா?

**கண்ணன்:** சே! வெள்ளிக்கிழமை விளக்கு வெச்ச வேளையிலே அமங்கலமா பேசறீங்களே, நீங்க மெகா சீரியல் ஸ்க்ரிப்ட் ரைட்டரா?

**அபர்ணா:** இதப் பாரு கண்ணன்! கரப்பை

எடுக்காம எங்க உயிரை எடுக்கிறது அதர்மம்... அக்கிரமம்... அராஜகம், அநியாயம்.

**கண்ணன்:** அறிவீனம், அழிச்சாட்டியம், அடாவடித்தனத்தை விட்டுட்டியே!

*(அகாடமி கேன்டீனில் கண்ணனின் கண்கள், அபர்ணாவைப் பார்த்து கீரை வடை சைஸில் விரிகின்றன.)*

**அபர்ணா:** ஹலோ கண்ணன்! வாட் எ சர்ப்ரைஸ்! கச்சேரியில் ஃப்ளூட் வாசிச்சது நீயா? கரகரப்பிரியா பிரமாதம்.

**கண்ணன்:** நல்லவேளை. கரப்புப் பிரியான்னு சொல்லாம விட்டியே!

**அபர்ணா:** ஸாரி கண்ணன்! கரப்பு விஷயத்திலே தப்புப் பண்ணிட்டேன். எங்கம்மா சாரதா மேலேதான் தப்பு. கரப்புகளோட ஜன்ம விரோதி அவங்க.

**கண்ணன்:** தினம் ஒரு கரப்பை என்கௌன்டர் பண்ணி, துடைப்பத்தாலே வாசப்

# ப்ரியாவோ?

படி வரை ஹாக்கி பிளேயர் மாதிரி 'பாஸ்' பண்ணினவங்க, லான்டிங்லே ஏன் விட்டு வெக்கறாங்கன்னு புரியாம இருந்தது. அப்பாதான் விளக்கம் குடுத்தார். காமன் ஏரியாவைப் பெருக்க வேண்டிய அஞ்சலை, சரியா வேலையைச் செய்யறாளான்னு செக் பண்ணத்தானாம். ஊர்லே எதிர்த்த வீட்டு எருமை மாடு கன்னு போட்டுடுத்துன்னு நாலு நாளா அவ வராததினாலே, அப்பாவே தினம் அந்த கரப்புகளை எடுத்து சாக்கடையில் போட்டு சேவை செஞ்சிண்டிருந்தார்.

**அபர்ணா:** ஸாரி கண்ணன். உங்கப்பாவைத் தப்பா பேசிட்டேன். ஆமா, உங்கிட்டே இருக்கிறது சாதாரண

## ஜே.எஸ்.ராகவன்

ஃப்ளூட்டா? மேஜிக் ஃப்ளூட்டா?

**கண்ணன்:** ஏன்?

**அபர்ணா:** பைடு பைப்பர் ஆஃப் ஹாமலின் கதையிலே வர்ற மாதிரி வாசிக்க எல்லா கரப்புகளையும் உன் பின்னாடியே பேரணியா வரவழைச்சு கூவத்திலே குதிக்க வைக்கலாம் இல்லியா?

**கண்ணன்** *(முகத்தைச் சுளித்து)* என்னது கூவத்திலேயா? நீ கரப்பு எதிரியா இருக்கலாம். ஆனாலும் இவ்வளவு கெட்ட எண்ணம் கூடாது.

**(சிரிக்கிறார்கள்)**



''கைத்தொழில் ஒன்றைக் கற்றுக் கொள்; கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்'' என்ற பழைய பாடல் புதிய அர்த்தத்தைத் தந்துள்ளது. ப்ளே தெரபி (விளையாட்டு சிகிச்சை), மியூஸிக் தெரபி (இசை சிகிச்சை)யைத் தொடர்ந்து தொழிற் சிகிச்சையும் இப்போது துவங்கியிருக்கிறது. கைத்தொழில் மனத்தைச் சீர்படுத்தும் சிகிச்சையாகவும் மாறியுள்ளது.

மனவளர்ச்சி குன்றிய சிறப்புக் குழந்தைகளுக்குப் பல்வேறு சிறு தொழில்களைக் கற்றுக்கொடுப்பதே தொழிற் சிகிச்சை என்கிறார்கள்.

14 வயது முதலான குழந்தைகளுக்கு ப்ளாக் பிரிண்டிங், டையிங், செயற்கை நகை தயாரித்தல், ஆஃபீஸ் ஃபைல், கார்டுகள், பிளானர்கள் தயாரித்தல், ஊசி வேலைப்பாடுகள், மணி வேலைப்பாடுகள், சமையல் போன்றவற்றில் பயிற்சி அளிக்கிறார்கள். இதனால் வெட்டுதல், ஒட்டுதல், கோத்தல் போன்ற நுணுக்கமான வேலைகள் மூலம் விரல் நுனிகளுக்கு



# செய்யும் தொழிலே சிகிச்சை!



வேலை கொடுக்கும்போது, மூளையின் சில குறிப்பிட்ட பகுதிகள் தூண்டப்படுவதாகக் கண்டறியப்பட்டுள்ளது. இதுநாள் வரை சவாலாக இருந்த சாதாரண வேலைகள் இப்போது எளிதாகிவிடும். இந்தத் தொழிற் சிகிச்சை இப்போது பிரபலமாகி வருகிறது.

பொதுவாக வயது வந்த இக்குழந்தைகளுக்கு வீட்டில் சரியான உறுதுணை இல்லை. உடன் பிறந்தவர்களோ பெற்றோரோ பெரும்பாலான குடும்பங்களில் இவர்களுடன் அதிக நேரம் செலவிடுவதில்லை. அதனால் இவர்கள் டி.வி. ஒன்றே கதி என்று முடங்கிவிட வாய்ப்புண்டு. இதனால் உளவியல் ரீதியாகப் பாதிக்கப்பட்டு கோபம், பிடிவாதம் ஆகிய குணங்கள் அதிகரிக்கும். ஆனால், தன் ஒத்த வயதுடைய நண்பர்களுடன் இவர்கள் நேரத்தைச் செலவிடும்போது இப்பிரச்னைகள் எழ வாய்ப்பு மிகக் குறைவு. தனக்கேயான மொழியில் பேசி, சிரித்து, வேலை செய்யும்போது மொழித்திறன் மற்றும் புரிந்துகொள்ளும் திறன் அதிகரிக்கின்றன. இவ்வாறு உடல் மற்றும் மன ரீதியாக இச்சிகிச்சை பலனளிக்கிறது. இத்தொழிற் சிகிச்சையைப் பற்றி சிறப்புக் குழந்தைகளுக்கான வி-எக்ஸெல் என்ற பள்ளியை நடத்தும் வசுதா ப்ரகாஷிடம் கேட்டபோது:

**இச்சிகிச்சையின் நோக்கம் என்ன?**

''இப்பயிற்சி மற்றும் சிகிச்சைக்குப் பின் நாளையே இவர்கள் தனியே தொழில் தொடங்கி

கொள்ள உதவ வேண்டும். சமுதாயத்தை அவன்(ள்)எதிர்கொள்ள உதவ வேண்டும்.''

**இவர்கள் வெளியே போய் வேலை செய்ய முடியுமா?**

''மிதமான மனவளர்ச்சி குன்றியவர்கள் நிச்சயமாகப் பணியாற்ற முடியும். இவர்களது திறனையும், மனநலனையும் புரிந்து கொண்டு பல நிறுவனங்கள் இவர்களுக்கு வாய்ப்பளிக்க முன்வர வேண்டும்.''

**இவர்கள் தயாரிக்கும் பொருட்களை எப்படி விற்பனை செய்கிறீர்கள்?**

''எங்கள் பள்ளியிலேயே பொருட்காட்சி நடத்தி விற்பனை செய்கிறோம். வெளியிடங்களுக்குக் கொடுக்கும்போது இத்தகைய குழந்தைகளால் தயாரிக்கப்பட்டவை என்று முத்திரை குத்துவதில்லை. அவர்களுக்கு வேண்டியது அனுதாபம் இல்லை. ஆதரவு மட்டுமே.

**தமிழ்நாட்டில் இச்சிகிச்சையின் தேவை என்ன?**

''சமுதாயத்தை எதிர்கொள்ள உதவும் இதுபோன்ற பயிற்சியினால், பெற்றோரின் பயத்தைப் பெருமளவு குறைக்கலாம். நம் நாட்டில் இவர்களின் பிறப்பு விகிதம் அதிகரித்து வருவதால் சிகிச்சையின் தேவையும் அதிகமே. ஒவ்வொரு சிறப்பு இளைஞரையும் இச்சிகிச்சை சென்றடைய வேண்டும் என்பதே என் கனவு.''

**- லக்ஷ்மி மோகன்**







* பயிற்சியின் போது...

விடுவார்கள் என்பதல்ல. நாணயங்கள் பற்றிய வகுப்பு, டைம் மேனேஜ்மென்ட், செலான், ட்ரெயின் டிக்கெட்டுக்கான அப்ளிகேஷனை நிரப்புவது, கடைக்குச் சென்று பொருட்களை வாங்கி வருதல் என்று பலவற்றிலும் பயிற்சி அளிக்கப் படுகிறது. கைத்தொழிலுடன் அடிப்படை அத்தியாவசிய அறிவும் கிடைக்கிறது.

இதனால் தினசரி வாழ்க்கைப் போராட்டத்தைக் குறைக்க முடியும். எந்தவொரு சிகிச்சையும் தினசரி அலுவல்களை எதிர்

காதைக் கொடுங்க



# வீணாகும் உழைப்பு?

★கூட்டணியிலிருந்து சிறுத்தைகளைத் தள்ளி விடவேண்டுமென்று தி.மு.க.வை, காங்கிரஸ் வற்புறுத்தி வருவது கண்டு திருமாவும் ''தமிழ்நாட்டில் அரசியல் செய்வதா; அல்லது கட்சிக்கு மூடுவிழா நடத்துவதா?'' என்று கலங்கிப் போயிருக்கிறார். மூத்த காங்கிரஸ் தலைவர்கள் திருமாவை ஒதுக்க நினைக்க, ''நாம் யதார்த்த நிலையையும் பார்க்க வேண்டும். பொதுவாக, தாழ்த்தப்பட்ட சமூகம் காங்கிரஸின் மீது பற்றுடன் இருக்கும் சமூகம். திருமாவளவனை ஒதுக்கிவிட்டால் சுத்தமாக அந்த வாக்கு வங்கியை காங்கிரஸ் இழந்துவிடும். இந்தத் தேர்தலில் எந்தவிதமான ரிஸ்க்கும் எடுக்கக்கூடாது'' என்று வாசன் மட்டுமே சொல்கிறாராம். கலைஞருக்கும் திருமாவளவனைக் கழற்றி விடுவதில் விருப்பமில்லை. திருமாவும் இனி தேர்தல் வரை அடக்கி வாசிக்கச் சம்மதித்தால் கூட்டணியில் தொடர்வதில் எந்தப் பிரச்னையும் இருக்காது. இரண்டு சீட்டுகளை அல்லவா எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் திருமா.

★ ஆண்டிப்பட்டி இடைத்தேர்தலின் போது, பெரியகுளம் எம்.பி.யாக இருந்த தினகரன், அம்மாவுக்காகச் சில யுக்திகளைக் கையாண்டார். அதில் ஒன்று, ஒவ்வோர் இரவும் ஏதாவது ஒரு கிராமத்துக்குச் செல்வது; அந்த கிராமப் பிரமுகர்களைச் சந்தித்து, ''உங்களுக்கு என்ன தேவை?'' என்று கேட்பது; அவர்கள் ''கோயில், திருப்பணி செய்ய வேண்டும்; குளங்கள் தூர்வாரப்பட வேண்டும்'' என்று ஏதாவது பொது வேலைகளைச் சொல்வார்கள். உடனே ஒரு கணிசமான தொகை கொடுக்கப்படும். ஆளுங்கட்சிப் பிரமுகர்களிடம் அதே பாணியில், இப்போது கிராமப் பிரமுகர்கள் கூட்டணி அமைத்துக் கொண்டு, ''இவ்வளவு பேர் இருக்கிறோம். தலைக்கு இவ்வளவு தாருங்கள்'' என்று நேரடியாக விஷயத்துக்கு வருகிறார்களாம். வோட்டுக்கு 3000 ரூபாய் போட்டு விநியோகம் நடந்து வருகிறதாம்.

★ ''சமத்துவ மக்கள் கட்சி, திருமங்கலம் இடைத்தேர்தலில் நிற்கக் கூடாது'' என்று அந்தக் கட்சிப் பிரமுகர்கள் சிலர் சரத்திடம் முட்டி மோதியும், எந்தப் பயனுமில்லாமல் தேர்தலில் நிற்க முடிவு செய்துவிட்டாராம் சரத். ''நாங்கள் நிச்சயம் அங்கே வெற்றி பெற முடியாது. கட்சி துவங்கி முதன்முதலாகப் போட்டியிடும் தொகுதியில், கொஞ்சம் கண்ணியமாகவாவது தோற்க வேண்டும். அங்குள்ள கிராமங்களில் கட்சிக்குக் கட்டமைப்பு கிடையாது. சரத் - ராதிகா உழைப்பு வீணாகும்'' - நொந்து சொல்கிறார் ஒரு பிரமுகர்.

- ஸ்ரீநி

# நடக்குமென்பார்; நடக்கும்!

## புத்தாண்டு பலன்கள் - 2009

சென்ற வாரத் தொடர்ச்சி...

## துலாம்



இது அற்புதங்களை அள்ளி வழங்கும் ஆண்டாக அமைய இருக்கிறது. வீடும் உத்யோகமும் மாறும். அதாவது வாடகையாக இருந்து வந்தால் அது சொந்தமாக மாறும். தொழிலாளியாக இருந்து வந்தால் தொழிலில் பங்குதாரராக மாறுவீர்கள். திருமணத் தடை நீங்கும். விவசாயம், கட்டடம், சினிமா போன்றவற்றில் கண்ணை மூடி முதலீடு செய்யலாம். பகை விலகி உங்களைச் சுற்றி சாந்தம் சூழும்.

**பலம் :**

வழக்கில் வெற்றியும், அரசியலில் புதிய பதவியும், சினிமாத் துறையின் ஆதரவும் இவ்வாண்டு உங்கள் வாழ்க்கைக்குக் கூடுதல் பலமாக அமையக்கூடும்.

**பலவீனம் :**

எச்சரிக்கை செய்யுமளவு ஏதுமில்லை.

**பரிகாரம் :**

வியாழன்தோறும் கோயில் சென்று தீபம் ஏற்றி வரவும். செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் ராகு, கேதுவுக்கு

■ தஞ்சை பரத்வாஜ்

நமஸ்காரம் சொல்லிட்டு வாங்க.

## விருச்சிகம்



நிறைவான வருஷம். பொன்னும் பொருளும் வீடும் வாங்க சாதகமான சூழல் வந்து சூழும். தீராத பிரச்னை தீரும் நேரம். புதிய வேலை வாய்ப்பு பெருகும். வெளிநாடு செல்லும் யோகம் கிட்டும்.

**பலம் :**

சாதுக்கள் தரிசனம் கிட்டும். சிக்கல்கள் விலகும். வாக்குவன்மை கூடும். ஏற்றுமதி இறக்குமதியில் நல்ல வருமானமும் புகழும் கூடும். நம்பி முதலீடு செய்யலாம்.

**பலவீனம் :** ஏதுமில்லை.

**பரிகாரம் :**

மகான்களைத் தரிசித்து ஆசி பெற்றால் போதும். முன்னோர் வழிபாடும் சாலச் சிறந்தது.

## தனுசு



இது உங்கள் புதுசுகளால் ஆன வருடம். பழைய பாக்கி வசூலாகும். பழைய பகையும் முறியும். புதிய வேலை துவங்கும். புதிய நண்பர்கள் கிடைப்பார்கள். பழைய வீட்டிலிருந்து புது வீட்டுக்கு இடம் பெயர்வீர்கள். அது உங்களுக்குச் சொந்தமாக அமையும். (இவ்வாண்டுக்குள்) வாகனம், அச்சு, தொலைத் தொடர்பு போன்ற வேலைகளை நம்பித் துவங்கலாம். வீட்டுல மகிழ்ச்சியா இருந்தா எதையும் ஜெயிக்கலாமில்ல... அது உங்களுக்கு நூறு சதவிகிதம் கிடைக்கும்.

**பலம்:**

வியாபார முன்னேற்றமும், வெளிநாடு செல்லும் வாய்ப்பும், புதிய தொழில் முதலீடும் சாத்தியமாகும். அரசியலில் நுழைய திட்டமிருந்தால், இதுதான் சரியான சந்தர்ப்பம். தீர்ப்புகள் உங்களுக்குச் சாதகமாகவே அமையும்.

**பலவீனம்:**

சுபச்செலவுகளும், கடன்களும்தான் இவ்வாண்டு உங்களுக்கு உரிய பலவீனம்.

**பரிகாரம்:**

மூதாதையரை வழிபட்டு வந்தாலே போதும். உங்கள் ஆத்ம திருப்திக்காகச் சொல்வதென்றால்... செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் கோயிலுக்குச் சென்று தீபம் ஏற்றி, ராகு, கேதுவைச் சுற்றி வாருங்கள்.

## மகரம்



இது உங்களுக்கு போனஸ் ஆண்டு. சென்ற ஆண்டு பெற்று வந்த இடர்களுக்கு மாற்றாக, இன்பங்கள் இரட்டிப்பாக வந்து சேரும் ஆண்டாக இது அமையும். கடன் தொல்லை தீரும். உறவுகளிடையே கசப்பு விலகும். வீடு மாறுவீர்கள். தொழில் துறையில் சவால்களைச் சந்தித்து வெற்றிவாகை சூடுவீர்கள். வாரிசுகளால் மதிப்பும் மரியாதையும் கூடும். புதுத் தொடர்பில்(?) கொஞ்சம் உஷாராயிருக்க வேண்டும்.

**பலம்:**

பூர்வீகச் சொத்து தேடிவரும். சமூக

சேவகர்கள், சினிமாத் துறையினர் மத்தியில் செல்வாக்கு கூடும்.

### பலவீனம்:

அவ்வப்போது பயந்து முடிவெடுக்கத் திணறுவதும், சிறு சிறு உடல் உபாதைக்கு மிரண்டு போவதும், கொஞ்சம் மருத்துவச் செலவும்தான் பலவீனம்.

### பரிகாரம்:

சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயருக்கு துளசி மாலை சாற்றி வரவும். மனக்குழப்பம் வரும்போதெல்லாம், கோயிலில் ஐந்து நிமிடம் உட்கார்ந்து பின் முடிவெடுத்துவிட்டு வரவும்.

## கும்பம்



இருளில் இருந்து வந்த நீங்கள் வெளிச்சத்துக்கு வரும் காலமிது. இதுவரை பெறத் தவறிய பரிசு மழை, பாராட்டு, பத்திரிக்கையில் பெயர் எனக் குதூகலிக்கப்போகிற ஆண்டு. வீடும் வாகனமும் வாங்குவீர்கள். அரசியலில் ஏற்றம் வரும். சமூக சேவை அந்தஸ்தைப் பெற்றுத் தரும். பழைய கடன் வந்து சேரும். விலகிய பழைய உறவுகளும் தேடி வரும். வெளிநாடு செல்லும் யோகம் உண்டு.

### பலம்:

மகான்களின் சந்திப்பும் ஆசியும் கிட்டும். அது உங்களுக்கு ஆத்ம பலத்தைக் கூட்டும். மனஉளைச்சல் தந்த வழக்கு சாதகமாக முடியும்.

### பலவீனம்:

வயதான இரத்த உறவுகளை, கொஞ்சம் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வதும், அதற்காக நேரத்தை, பொருளைச் செலவிடுவதும் தவிர்க்க முடியா பலவீனம்.

### பரிகாரம்:

வியாழன்தோறும் குருவையும், சனிதோறும் சனீஸ்வரரையும் தீபம் ஏற்றி வழிபட்டால், தீய பார்வைகளும் திகிலடைந்து ஓடும்.

## மீனம்



எதை வேண்டுமானாலும் திட்டமிடுங்கள். அவை உங்களுக்கு சாதகமாகவே அமையும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். சினிமா, சமூக சேவையில் புகழ் கிடைக்கும். சத்ரு தொல்லை விலகும்.

### பலம்:

பூர்வீகச் சொத்து வந்து சேரும். விலகியிருந்த உடன்பிறப்புகள் வந்து சேர்ந்து உதவுவார்கள். கடன் நிலுவை பைசலாகும். இழந்த செல்வாக்கை மீண்டும் அடைவீர்கள்.

### பலவீனம்:

உடல்நலத்தில் கவனம் வேண்டும். புதிய உறவுகளில் மெய்மறந்து அதிகம் பூசிக்கொள்ளாமல், பட்டும் படாமல் இருங்கள். இல்லையேல் அதுவே உங்கள் யோகத்துக்கு பலவீனமாகும்.

### பரிகாரம்:

செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் ராகு, கேதுவுக்கு பூ வைத்து, தீபம் ஏற்றி வழிபட, சங்கடம் நீங்கி சாந்தம் பிறக்கும்.

"குழந்தையா இது; குட்டிச் சாத்தான்... இனியும் என்னால் இதை மேய்க்க முடியாது. நாளையிலருந்து நான் வேலைக்குப் போகப் போறேன்..." வெடித்தாள் மரியபுஷ்பம். அவசரமாய் வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்த முத்துப்பாண்டி ஒரு நிமிஷம் திகைத்தான். அப்புறம் தன்னுடைய மதிய உணவுப் பையை எடுத்து தோளில் மாட்டிக் கொண்டு கிளம்பப் போனவனை மறித்து, மறுபடியும் சத்தம் போட்டாள் அவள்.

"இங்க ஒருத்தி கரடியாக் கத்திக்கிட்டிருக்கேன்; காதுலயே வாங்காதது மாதிரி நீ பாட்டுக்கு கிளம்பினேன்னா என்னப்பா அர்த்தம்? நான் வெளையாட்டுக்குச் சொல்லலை. நேத்தே நான் வேலை பார்த்த பழைய ஸ்கூல்ல பேசிட்டேன். நாளையிலருந்து வேலைக்கு வரச் சொல்லிட்டாங்க. நாளையிலருந்து நீதான் லீவு போட்டுப் பார்த்துக்கணும்..." அதிகாலை வேளையில் சண்டை வேண்டாமென்று அமைதியாய் அலுவலகம் கிளம்பிப் போய்விட்டான் முத்துப்பாண்டி.



# உயிர் ஊறும்

அலுவலகத்தில் அவனுக்கு வேலையே ஓடவில்லை. திடுமென்று இப்படி அறிவித்தால் என்ன செய்வது? ஆனால் மரியபுஷ்பம் எப்பவுமே இப்படித்தான். புருஷனென்றாலும் புள்ளையென்றாலும் அவளின் அதிகார வரம்புக்குள் அவள் சொல்கிறபடியெல்லாம் ஆட வேண்டும்; மறுத்தால் அதை அவளால் தாங்கிக்கொள்ள முடியாது. சில்வியாவிடம் அவளின் அதிகாரம் செல்லுபடியாகவில்லை. சில்வியா இவர்களின் பதினைந்து மாதக் குழந்தை.

"என்ன ரொம்ப டல்லா இருக்கேள்; உங்க குட்டி இளவரசி ரொம்பப் படுத்த

# ஒற்றைச் சொல்!

நாளோ...?'' என்றபடி இவனுடைய டேபிளுக்கு வந்தார் வீரமணி. இவர்தான் சில்வியா இவர்களுக்குக் கிடைப்பதற்கு மூல காரணமாய் இருந்தவர். மிகவும் அற்புதமான மனிதர்.

ஒருமுறை இவன் வீட்டுக்கு வந்தவர், யதார்த்தமாய்க் கேட்டார்: ''குழந்தைங்களை எங்கே காணோம்?''

''எங்களுக்குக் குழந்தைகள் இல்ல ஸார்...'' என்றான். அவர் கொஞ்ச நேரம் மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்புறம், ''பகவான் எப்பவுமே இப்படித்தான் ஸார்... நல்லவாளத்தான் கஷ்டப் படுத்துவார்...'' என்றவர், ''பேசாம நீங்க ஒரு குழந்தையைத் தத்தெடுத்து வளருங்களேன் ஸார்...'' என்றார். முத்துப்பாண்டி சிரித்தான்.

குழந்தைத் தத்தெடுப்பு ஒன்றும் அவ்வளவு சுலபமான காரியமில்லை என்பது அனுபவம் உணர்த்திய உண்மை.

மெதுவாய் ''நீங்க அப்படி ஒரேயடியா ஒதுங்கிடக் கூடாது ஸார்; கண்டிப்பா பணம் பண்ண நினைக்காத சேவை மனப்பான்மையுள்ள நல்ல ஏஜென்சிகள் ஏதாவது இருக்கும் ஸார்... நான் தேடி, உங்களுக்கு ஒரு குழந்தை வாங்கித் தர்றேன்...'' என்றவர் உடனே செயலில் இறங்கினார்.

முந்திய அனுபவங்களுக்கு முற்றிலும் மாறாக மளமளவென்று காரியங்கள் நடந்தேறின. ஒரே மாதத்தில் குழந்தை இவர்களின் கைகளுக்கு வந்துவிட்டது.

குழந்தைக்கு சில்வியா என்று பெயர் சூட்டினார்கள். முத்துப்பாண்டிதான் இந்தப் பெயரைப் பரிந்துரைத்தான். ''பேரு ரொம்ப நல்லாருக்கே! எங்கேருந்துப்பா புடிச்ச, இண்டர்நெட்லருந்தா...?'' என்று மரிய புஷ்பம் கேட்டாள். ''அசோகமித்ரன் இந்தப் பேர்ல ஒரு சிறுகதை எழுதியிருக்கார்; அப்புறம் மேலைநாட்டுல சில்வியாபிளாத்துன்னு ஒரு பெரிய எழுத்தாளர் இருக்கார்...'' என்றான் அவன். எப்படியோ பெயர் அவளுக்கும் ரொம்பப் பிடித்திருந்தது.

குழந்தையைத் தத்தெடுத்தபோது, மரிய புஷ்பம் ஒரு மெட்ரிக்குலேஷன் பள்ளியில் முதுகலைப் பட்டதாரி ஆசிரியையாக வேலை பார்த்துக்கொண்டிருந்தாள்.

''இவ்வளவு நாள் கழிச்சு கடவுள் நமக்கொரு குழந்தை கொடுத்திருக்காரு; பேசாம நான் வேலையை விட்டுட்டு வீட்லருந்து குழந்தையை வளர்க்கட்டுமாப்பா? என் சம்பளம் இல்லாம நீ சமாளிச்சுடுவியா...?'' முத்துப்பாண்டியும் உடனே சம்மதித்தான். அவனும் சில நாட்கள் விடுமுறை போட்டுவிட்டு சில்வியாவுடனே இருந்தான்.

முதல் சில நாட்கள் சில்வியா ரொம்பவும் சமர்த்தாய் இருந்தது. அப்புறம் ரொம்பவும் அழும்பு பண்ணத் தொடங்கி விட்டது.

பாதி ராத்திரி வரைக்கும் வாய்மூடாமல் அழுகிறது. அதுவும் தூங்காமல், மற்றவர்களையும் தூங்க விடாமல், மரியபுஷ்பத்தின் மடியில் படுத்தால்தான் தூங்குவேனென்கிறது. ஆழ்ந்து தூங்குகிறதே என்று படுக்கையில் போட்டால், விழித்துக் கொண்டு வீறிடுகிறது. விழித்திருக்கும் நேரமெல்லாம் தூக்கி வைத்திருக்கச்

சொல்கிறது. கீழே இறக்கிவிட்டால் கத்தி ஊரைக் கூட்டுகிறது. வீடு முழுவதும் விளையாட்டுச் சாமான்களும் பொம்மைகளுமாய் வாங்கி நிறைத்திருக்கிறார்கள். ஆனால், சில்வியா எதையும் சட்டை செய்வதே இல்லை. அது எப்போதும் தானுண்டு தன் அழுகை உண்டு என்றே இருக்கிறது.

அதைவிடக் கொடுமை; எவ்வளவு சாப்பிட்டும் சில்வியா நாளுக்கு நாள் மெலிந்து எடை குறைந்துகொண்டே வந்தாள். டாக்டரோ ''குழந்தை எல்லா விதத்திலும் நார்மலா இருக்கு.. எடை குறைவு என்பதெல்லாம் இந்த வயதில் ஒரு பொருட்டே இல்லை; மேலும் எடைமெஷினில்கூட வித்தியாசங்கள் இருக்கும்...'' என்றார். மரியபுஷ்பத்தின் நச்சரிப்புக்கு ஆற்றமாட்டாமல் டயட்டீஷியனைப் பார்க்கச் சொல்லி பரிந்துரைச் சீட்டு கொடுத்தனுப்பினார்.

''இந்த டாக்டருக்கு தடுப்பூசி போடுறதைத் தவிர்த்து வேறெதுவும் தெரியாது போலருக்குப்பா...'' என்று அங்கலாய்த்தபடி டயட்டீஷியனைப் பார்த்தார்கள். அவர் இவள் கொடுக்கிற உணவுகளையெல்லாம் கேட்டுவிட்டு, ''போதுமே! தேவைக்கு மேலேயே குடுக்குறீங்களே...'' என்றவர், ''பிறக்கும்போது எடை குறைவாயிருக்கும் குழந்தைகள் ரொம்பவும் மெதுவாய்த்தான் தேறி வரும்...'' என்று சொல்லிவிட்டார்.

மருத்துவமனையில் டாக்டருக்காக காத்திருக்கும் தருணங்களில் அங்கு வரும் மற்ற கொழுக் மொழுக்கென்ற குழந்தைகளைப் பார்க்கும்போதும், அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் எல்லாம் குழந்தையை தேற்றுவதற்கென்று ஆளாளுக்கு ஒரு டயட்டைப் பரிந்துரைக்கும்போதும் மரியபுஷ்பம் ரொம்பவும் உடைந்து போனாள்.

அதைவிட, தத்தெடுக்கும் நடவடிக்கையின் ஒரு பகுதியாக சில்வியாவை நீதிபதியிடம் காண்பிப்பதற்காக கோர்ட்டுக்குக் கொண்டு போனபோது, அங்கு வந்திருந்த குழந்தைகள் இல்லத்தின் சகோதரி, ''என்னம்மா குழந்தை இவ்வளவு மெலிஞ்சு போச்சு; கொஞ்சம் பார்த்துக்கங்கம்மா...'' என்றபோது மரியபுஷ்பத்தை சமாதானப்படுத்தவே முடியவில்லை. அன்றைக்கெல்லாம் அழுதுகொண்டே இருந்தாள்.

''ஏங்க, குழந்தையைத் திரும்ப வாங்கிக்குவாங்களா?'' என்று முதலில் பயந்து பயந்து பேசியவள், அப்புறம், ''வேணுமின்னா நமக்குக் குழந்தையை வளர்க்கத் தெரியலேன்னு நாமளே சில்வியாவைத் திருப்பிக் கொண்டுபோய் குடுத்



*''என்ன அழுகை அழறீங்க நீங்க... கொஞ்சம்கூட மனசைத் தொடலையே!''*

*''வேற எப்படி சார் அழுவறது?''*

*''அஞ்சு நாள் டைம் தரேன்... எல்லா டி.வி.லயும் வர்ற மெகா சீரியல்களைப் பார்த்திட்டு வாங்க போதும்!''*

*- வெ.சீதாராமன்*

துட்டு வந்துடலாமாப்பா...?'' என்று புலம்பத் தொடங்கிவிட்டாள். முத்துப் பாண்டிக்கு ரொம்பவும் பயமாகிவிட்டது. இவளுக்கு ஏதும் ஆகிவிடுமோ என்று.

பத்து மாசத்திலேயே குழந்தைகள் பேசத் தொடங்கிவிடுமென்று ஒரு பத்திரிக் கையில் வாசித்துவிட்டு, சில்வியாவுக்கு பேச்சு கற்றுக்கொடுக்கத் தொடங்கினாள் மரியபுஷ்பம். அதுவும் அவ்வளவு சுலப மாக இருக்கவில்லை. கொஞ்சம் சிரமப் படுத்தினாலும் செய்கைகளை ஓரளவுக்கு சீக்கிரமே கற்றுக் கொண்டது. ஆனால், பேசுவதற்கு வார்த்தைகள்தான் உருப்பெற வேயில்லை. ஏய்... ஆ... ஊ... என்று சத்தம் மட்டுமே கொடுத்தது.

என்னதான் மழலைச் சொல் இனி தென்று வள்ளுவர் சொல்லி இருந்தாலும், வார்த்தைகளற்ற மழலை மிழற்றலை எத் தனை நாட்களுக்கு ரசிக்க முடியும்! மரிய புஷ்பம் பொறுமை இழந்தாள். மடியில் போட்டுக் கொண்டு தாத்தா, அத்தை என்ற எளிதாய் நாக்குப் புரளும் வார்த்தைகளைக் கூட எத்தனை தரம் சொன்னாலும், திருப்பிச் சொல்ல எந்த முயற்சியும் செய் யாமல் முரண்டு பிடித்தது; அழுதது; அவளின் மடியிலிருந்து இறங்கிப் போகத் தொடங்கியது. மரியபுஷ்பம் ஆசிரிய அவ தாரம் எடுத்தாள். ஆம்! குழந்தையை அடித் துச் சொல்லிக் கொடுக்க முயற்சித்தாள்.

''எதுக்காகவும் குழந்தையை அடிக்கா தேம்மா...'' என்று ஆட்சேபித்தான் முத்துப் பாண்டி. ''இது போட்டி நெறைஞ்ச உல கம்ப்பா; காலாகாலத்துல எதையும் கத்துக் கலைன்னா நம்ம குழந்தை பின்தங்கிடு மோன்னு பயமா இருக்குப்பா... அப்புறம் எனக்கு வாய்ச்சது மாதிரி ஒரு உதவாக்கரை வாழ்க்கைதான் இதுக்கும் கிடைக்கும்...'' என்றாள் மரியபுஷ்பம். முத்துப்பாண்டிக்கு சுருக்கென்றது. இருவரும் சண்டை போட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள். சில்வியா இன்னும் பயந்துபோய்

முந்தைய இரவினை
சாஸ்வதம் என நம்பி
வாழ்ந்த வாழ்க்கையை
பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன
உதிர்ந்து கிடக்கின்ற
ஈசல் பூச்சியின் சிறகுகள்



இருவரையும் வெறித்துப் பார்த்தது.

இரண்டு நாட்களுக்கு முன்னால் முத்துப்பாண்டி வேலை முடிந்து இரவு வீட்டுக்குத் திரும்பியபோது, கதவுக்குப் பின்னால் ஒடுங்கிப் போய் உட்கார்ந்தி ருந்தது. இவன் காலைக் கட்டிக்கொண்டு கதறி அழுதது. தூக்கிக்கொண்டு மரிய புஷ்பத்தைத் தேடினால், அவள் இன் னொரு அறையில் படுத்துக்கிடந்தாள்.

''என்னப்பா ஆச்சு... குழந்தை ஏன் இப்படி கத்துது?''

''குழந்தையா இது! பிசாசு... இத்துனூண்டு இதுக்கு என்னமா கோபம் வருது தெரியுமா? மடியில போட்டு சொல்லிக் கொடுத்துக்கிட்டிருக்கேன். தொடையில கடிச்சு வெச்சுட்டு எழும்பிப் போகுதுப்பா... அதான் செமத்தியா வெளுத் துட்டேன்; சாயங்காலத்திலருந்து சாப்பிடற துக்கும் ஒண்ணும் குடுக்கலை... மண்டை யிலயும் ஒண்ணும் ஏற மாட்டேங்குது... வயித்தக் காயப் போட்டாத்தான் சரியா வரும்...''

''என்னப்பா இதெல்லாம்? குழந்தை கூடப் போய் சரிக்கு சரியாய்...''

''நீ சும்மா கெட; ஒனக்கு ஒரு எளவும் தெரியாது... நீ காலையில கிளம்பிப் போனா இராத்திரிதான் திரும்ப வர்ற; நான் தான் இது கூட மல்லாடுறேன். அதனால என் இஷ்டத்துக்கு வளக்க விடு. இல் லைன்னா உன்கூடவே தூக்கிட்டுப் போ...''

''உனக்குத்தான் குழந்தையோட சைக்காலஜியே புரியல; சும்மா அடியாத

மாடு படியாதுன்ற கற்காலத்து கான்செப்ட் லயே இருக்காதே... பொறுமையா சொல்லிக் குடு; எப்ப கத்துக்குதோ அப்ப கத்துக்கட்டும்; அவசரம் ஒண்ணுமில்ல; இதை வளர்க்கிறத விட வெட்டி முறிக்கிற வேலை எதுவும் உனக்கில்ல; புரியுதா...?'' முத்துப்பாண்டி கத்தவும், கோபித்துக் கொண்டு போய் படுத்துக் கொண்டாள்.

**அ**வளின் ஈகோ காயம்பட்டு விட்டது போலும்; அதுதான் அவசர அவசரமாய் நாளையி



சில்வியா உதட்டை மடித்து அழுத்தம் திருத்தமாக ''அம்மா...'' என்றது.

லிருந்து வேலைக்குப் போயே தீர்வேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். வீரமணியிடம் சொன்னபோது, ''அவங்க பிஸியா வேலை பார்த்துக்கிட்டு இருந்தவங்க இல்லியா? அதான் அவங்களால வீட்டில அடைஞ்சு கெடக்க முடியல... அவங்க வேலைக்குப் போகட்டும்; நீங்க ஒரே ஒரு வாரத்துக்கு கிரீச்சுல ஏற்பாடு பண்ணுங்க... நான் ஊர்லருந்து ஒரு வயசான அம்மாவை வரவழைக்கிறேன்; அவங்க உங்க வீட்டோட தங்கி குழந்தையைப் பார்த்துக் கட்டும்...'' என்றார்.

முத்துப்பாண்டிக்கும் அதுதான் சரி என்று பட்டது. அவன் அறிந்திருந்த ஒரு கிரீச்சில் பேசினான். அவர்களும் ''கொண்டு வந்து விடுங்கள்; பார்த்துக் கிறோம்...'' என்றார்கள். அலுவலகத்தில் பெர்மிஷன் போட்டுவிட்டு கொஞ்சம் சீக்கிரமே வீட்டுக்குப் போனான். மரிய புஷ்பம் குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். அது ஸோபாவுக்குப் பின்னால் ஒளிந்துகொள்ள, இவள் அங்கும் இங்கும் தேடுவதாக, ''எங்க... எங்க... என் செல்லத்தைக் காணலை!'' என்று பாவனை பண்ணிவிட்டு அப்புறம், ''ஏய்... குட்டி இங்கேயிருக்கு...'' என்று கண்டு பிடித்தாள்.

இவனைப் பார்த்ததும் விளையாட்டை நிறுத்தி விட்டு இருவரும் இவனிடம் வந்தார்கள். ''என்னப்பா, இன்னைக்கு இவ்வளவு சீக்கிரம்?'' என்றாள்.

''சில்வியாவைப் பார்த்துக் கிறதுக்கு நான் வேற ஏற்பாடு பண்ணிட்டேன்; நாளையிலருந்து நீ வேலைக்குப் போய்க்கலாம்...'' என்றான்.

''நான் என் முடிவைக் காலையிலேயே மாத்திக்கிட்டாச்சு... இனிமே எப்பவுமே நான் வேலைக்குப் போகப் போறதில்ல...''

''ஏன் என்னாச்சு? உன்னோட ஸ்கூல் பசங்க மேல கருணை வந்து பாவம் பொழைச்சுப் போகட்டுமின்னு இந்த முடிவுக்கு வந்துட்டியா?'' கிண்டல் பண்ணினான்.

''ஏய்... நீ உதைபடப் போறே! என் முடிவை மாத்தினதுக்குக் காரணம் நம்ம பொண்ணு...'' என்றபடி சில்வியாவை அழைத்து, ''குட்டி, நான் யாருன்னு அப்பாட்டச் சொல்லு..'' என்றாள். சில்வியா உதட்டை மடித்து அழுத்தம் திருத்தமாக ''அம்மா...'' என்றது. ●

ஒரு நிமிஷம் தலையெல்லாம் கிர்னு சுத்துது; சட்டுன்னு மின்னல் போல ஏதோ ஒண்ணு தாக்கி 'பட்'ன்னு பொறி கலங்குதே... ஏன்? கையில வெச்சிருக்கற பொருட்கள் நம்மனை அறியாமலே கீழே விழுறதே... எப்படி? சில வினாடிகள் நரம்பெல்லாம் முறுக் கேறி நிடுக்நிடுக்னு தூக்கிப் போடுதே... எதுக்காக? பல்லே உடைஞ்சு போற அளவுக்குக் கடிச்சுக்கறமே, என்னாச்சு நமக்கு... இப்படியெல்லாம் உங்களை அல்லது உங்களைச் சார்ந்தவங்களைக் கேள்விகள் குடையுதா? ப்ளீஸ் கொஞ்சம் கவனமா இருங்க. ஏன்னா இவையெல் லாம், 'நான் வந்திருக்கேன் ஜாக்கிரதை'ன்னு வலிப்பு நோய் எச் சரிக்கை பண்றதுக் கான அறிகுறிகள்'' என்று சற்றே கவலையோடும், எச்சரிக்கை யோடும் பேசுகிறார், அசோக் நகர் குமரன் மருத்துவமனையின் சைனீஸ் அக்குபஞ்சர் மருத்துவ நிபுணர் டாக்டர் நந்தகுமார்.



டாக்டர் நந்தகுமார்.

# டீன் ஏஜில் வரும் திடீர் சவால்!

''கிராமத்துல, பிறந்த குழந் தைக்கோ அல்லது பிறந்து சில மாதங் கள் ஆன குழந்தைக்கோ இசிவு வந் திருச்சுன்னு வைத்தியம் பண்ண ஆரம் பிப்பாங்க. அது வேற ஒண்ணுமில்லை; வலிப்பு நோய். பொதுவாகவே கரு விலிருக்கற குழந்தையை, தாயின் உணர்வுகள் பாதிக்கும் என்பது மருத்துவ உண்மை. அதனாலதான் கருத்தரித்த பெண்ணை சந்தோஷமான சூழ்நிலையில வெச்சுக்கணும்னு சொல்றது. சரிவிகித சத்துணவு சாப்பிடாமல் இருந்தாலும், பேறுகாலத்தில் தாயை நோய்கள் தாக்கி யிருந்தாலும், பிறக்கிற குழந்தைக்கு வலிப்பு வருவதற்கான சதவிகிதம் அதிகம். இதில் என்ன கொடு மைன்னா சி.டி. ஸ்கேன் எம்.ஆர்.ஐ. ஸ்கேன், ஈ.ஸி.ஜி. போன்றவற்றின் மூலம் கூட வலிப்பைக் கண்டறிய முடியாது. கரு வுற்றிருக்கும் தாய் கவனமாய் இருக்க ணும். தவறிக் கீழே விழுவது, சிறுசிறு விபத்துகளில் மாட்டுவது போன்றவை குழந்தையைப் பாதித்து வலிப்பை உண் டாக்கலாம். பிறவியிலேயே மஞ்சள் காமாலையோடு




சைனீஸ் அக்குபஞ்சர்

வரும் குழந்தைகளுக்கு, வலிப்பு அழையா விருந்தாளியாக வந்து சேரும். மேலும் பிறந்த குழந்தைக்கு வலிப்பு வருவதை, முழுமையற்ற மூளை வளர்ச்சிக்கான அறிகுறியாகக்கூட எடுத்துக் கொள்ளலாம்.

**குடும்பத்தினர் இவர்களோடு சகஜமாகப் பேசி, 'வலிப்பு' என்பது குறைபாடே அன்றி ஆபத்தான நோயல்ல என்பதை எடுத்துச் சொல்லணும்.**

தீராத காய்ச்சல், மூளையில் டி.பி., தலையில் அடிபட்டு ரத்தம் உறைவது போன்றவை வலிப்பு உண்டாகக் காரணமென்றாலும், மரபு வழியாகக் கடத்தப்படுவதற்கான சாத்தியக்கூறுகளும் இருக்கின்றன'' என்கிறார் டாக்டர் நந்தகுமார்.

''எல்லாவற்றையும்விட பெருங்கொடுமை, டீன் ஏஜ் பிள்ளைகளுக்கு வரும் வலிப்புதான். இது அவர்களின் வாழ்க்கையைச் சின்னாபின்னமாக்கிடும். இந்த அவசர யுகத்தில் ஏற்படும் மனஅழுத்தம், தைராய்டு சுரப்பியில் சமச்சீரற்ற சுரப்புத் தன்மை, மூளையின் பிட்யூட்டரி சுரப்பியில் கிருமிகளின் தாக்கம், மூளை தண்டுவடம் இரண்டிலும் ஓடும் CSF என்ற திரவத்தின் ஓட்டப் பாதையில் அடைப்புகள்... போன்ற காரணிகளால்தான் டீன் ஏஜ் பிள்ளைகளுக்கு வலிப்பு வருகின்றது.

வலிப்பு தாக்கத்துக்குள்ளானவர்கள் வெளியே போகும்போது தனியே செல்வதைத் தவிர்க்கலாம். வாகனம் ஓட்டுவதைக் குறைத்துக் கொள்ளலாம். இவர்களுக்கு மனரீதியான தாழ்வுமனப்பான்மை இருந்து கொண்டே இருக்கும். குடும்பத்தினர் இவர்களோடு சகஜமாகப் பேசி, 'வலிப்பு' என்பது குறைபாடே அன்றி ஆபத்தான நோயல்ல என்பதை எடுத்துச் சொல்லணும். நவீன மருத்துவத்தின் மூலம் இதனைக் கண்டறிந்து, சிகிச்சைக்கென மாற்று மருத்துவத்தை நாடி வந்துவிட வேண்டும். சைனீஸ் அக்குபஞ்சர் மருத்துவத்தில் இதுக்குன்னு பிரத்யேகமான ஏற்பாடுகள் இருக்கு. தலையில் ஓடுகிற மின்காந்த சக்தி ரேகைகளை ஆராய்ந்து அதற்கேற்ப சிகிச்சைகள் தரப்படும். டூனா களிம்பு முறை, நியூரோ அக்குபஞ்சர் போன்ற அடுத்தடுத்த நிலைகளில் வலிப்பை முற்றிலும் நீக்கலாம்'' என்கிறார்.

**உ**ணவுமுறைகள், முதலுதவிகள் குறித்தும் பேசினார் டாக்டர் நந்தகுமார்.

''வலிப்பால் பாதிக்கப்பட்டவர்கள், தங்களின் உணவில் கசப்பு சுவையைக் கூட்டிக் கொண்டு புளிப்பு, காரம் போன்றவற்றைக் குறைத்தல் நலம். வெங்காயம் காரம் நல்லது. மிளகாய் காரம் தீயது. ஒருவரை வலிப்பு தாக்கியவுடன் காற்றோட்டமுள்ள அறையில் முதலில் அவரைக் குப்புறப் படுக்க வைக்க வேண்டும். மேல் பல் வரிசைக்கும் கீழ் வரிசைக்கும் இடையே சிறு கட்டையை வைக்கலாம். இல்லையேல் நாக்கு இடையில் மாட்டிக் கொண்டு துண்டாகிவிடும். முக்கியமாக வலிப்பு தாக்கியவரை, கீழே போட்டு அமுக்கக் கூடாது! புருவ மத்தி, சுண்டு விரல் முடியும் இடத்துக்கு நேர் கீழ், கணுக்காலின் வெளிப்புறம் ஆகியவற்றைக் கட்டை விரலால் அழுத்தித் தடவிக் கொடுக்கும்போது, வலிப்பின் தீவிரம் கொஞ்சம் கொஞ்சமாக மட்டுப்படும். பிறகு உரிய மருத்துவரை அணுகி, தொடர் சிகிச்சையின் மூலம் குணமாக்கலாம்'' என்கிறார் சைனீஸ் அக்குபஞ்சர் மருத்துவர் நந்தகுமார்.

**- மகிமைராஜன்**

# சினி சிப்ஸ்

அடையாறு புற்றுநோய் மருத்துவ மனையில், புற்றுநோயால் பாதிக்கப் பட்ட குழந்தைகளோடு குழந்தையாய் உட்கார்ந்து 'அபியும் நானும்' படம் பார்த்திருக்கிறார் த்ரிஷா. தவிர, அந்தக் குழந்தைகளுக்கு பொம்மைகள், இனிப்புகள், உணவுகள் வழங்கி மகிழ்ந் திருக்கிறார். இனி ஒவ்வொரு பட ரிலீசுக் கும் இதுபோன்ற உதவிகள் தொடரு மாம். இவையெல்லாம் த்ரிஷாவின் அரசியல் பிரவேசத்துக்கு அடித்தளம் என் கிறது அவரது நலம் விரும்பும் வட்டாரம். *(நல்லாயிருக்கே... நிஷா புயல் மாதிரி த்ரிஷா புயலா...?)*

'வேட்டைக்காரன்' படத்தில் விஜய் யோடு ஜோடி போட எந்த ஹீரோயினு டைய கால்ஷீட்டும் கிடைக்காத நிலை யில், தெலுங்கின் முன்னணி நடிகை அனுஷ்காவைப் பிடித்துப் போட்டிருக் கிறது தயாரிப்பாளர் தரப்பு. அம்மணி சம்பளத்தை மட்டும் ஒன்றரை கோடிக்கு சல்லி பைசா குறைக்க மாட்டேன் என ஆரம்பத்திலேயே கொடிபிடிக்க, அவரின் இதரச் செலவுகளுக்கு என்ன செய்வதென ஏக்கத்தில் இருக்கிறார்களாம். *(கொடுமை கொடுமையேன்னு கோயிலுக்குப் போனா அங்க ரெண்டு கொடுமை ஜிங்குஜிங்குன்னு ஆடுச்சாம்!)*

இந்தி 'கஜினி' ஏகத்துக்கும் பிச்சிக் கிட்டுப் போக, உற்சாகத்தில் உயரமாகி யிருக்கிறார் இயக்குநர் ஏ.ஆர். முரு கதாஸ். 'கஜினி'யின் வசூல் கலவரத்தால் ஷாருக்கான், முருகதாஸை வளைத் துப்போடும் வேலையில் மும்முரமாக, முருகதாஸோ, தமது மானேஜர் சம் பத்தை புரொடியூஸர் ஆக்கும் முயற்சி யில், சூர்யாவை வைத்து புதுப் படத்தை இயக்க முடிவெடுத்திருக்கிறாராம்.

*(மானேஜருக்கும் மொட்டை போடா மல் இருந்தால் சரி.)*



நியூஸ் பாய்

# நிறுவனங்களின் வெற்றிக்கும் தனிநபர்களின் வெற்றிக்கும் முறையான சிந்தனையும் திட்டமிடுதலும் அவசியம்.



"பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது தமிழ் முதுமொழி. பொருளை சம்பாதிக்கும் வழி அறிந்தால் மட்டுமே போதாது. சம்பாதித்த பணம் உங்கள் நிகழ்காலத்துக்கும் வருங்காலத்துக்கும் பயனளிக்க வழிவகை செய்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். ஆனால் அதற்கு என்ன செய்வது என்று தெரியாமலேயே திட்டமிடுதல் பற்றிய விழிப்புணர்வு இல்லாமல் காலத்தையும் பணத்தையும் கோட்டை விட்டவர்கள் பலபேர். அந்த நிலையை மாற்றியமைத்துள்ளது SHS அட்வைசரி குரூப் Finance Planning எனப்படும் நிதி சார்ந்த திட்டமிடலுக்கு தனி நபர்களுக்கும் நிறுவனங்களுக்கும் உரிய ஆலோசனைகளையும் வழிமுறைகளையும் வழங்கும் நிறுவனம் தான் SHS அட்வைசரி குரூப். நிதியியல் பங்குச்சந்தை ஆகியவற்றை நன்கு அலசி ஆராய்ந்து உங்கள் பணமும் செல்வமும் உங்களுக்காக உழைக்க தக்க ஆலோசனைகளை வழங்க SHS அட்வைசரி குரூப்பில் திரு. எஸ். நாராயணன் தலைமையிலான குழு சிறப்பாக செயல்பட்டு வருகிறது.

தனி நபர்களைப் பொறுத்த வரை. நிதி சார்ந்த திட்டமிடல் மிகவும் அவசியம் என்று கூறும் எஸ். நாராயணன் அவர்களது சம்பளத்தை 30%, 40% என்ற ஃபார்முலாவில் திட்டமிட்டால் மட்டுமே ஓய்வுக்குப் பின் உழைக்காமல் இருக்க முடியும் என்கிறார். ஒவ்வொருவரும் அவரது வருவாயில் 30% செலவுகளுக்கும் 30% வரிக்கும் மீதம் உள்ள 40% தொகையை சேமிப்புக்கு ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்கிறார். இதில் முதலீடுகளைப் பொறுத்த வரை நீண்ட கால இலக்குகளைக் கவனத்தில் கொண்டே செயல்பட வேண்டும். பங்குச் சந்தையைப் பொறுத்த வரை ஒருவரின் வயதுக்கேற்ப திட்டமிட்டு செயல்பட வேண்டும். இதை எல்லாம் எப்படி செய்வது என்று புரியாமல் இருப்பவர்களுக்கு SHS அட்வைசரி குரூப் சரியான திசையைக் காட்டி ஆலோசனைகளை வழங்குகிறது.

தனி நபர்கள் பலரிடம் அவர்களாக ஈட்டிய செல்வமும் மூதாதையர் மூலம் வந்த சொத்து செல்வமும் இருக்கக் கூடும். அவற்றை எந்த வகையில் முதலீடு செய்து பாதுகாக்கவும் தங்கள் வாரிசுகளுக்கு அவர்கள் கஷ்டப்படாமல் இருக்க ஏற்பாட்டை செய்யவும் (அதாவது அடுத்த தலைமுறைக்கான சொத்து உருவாக்குதல்) SHS அட்வைசரி குரூப் தகுந்த ஆலோசனைகளை வழங்குகிறது. லைஃப் இன்சூரன்ஸ், ஹெல்த் இன்சூரன்ஸ், குழந்தைகள் கல்வி, ஓய்வூதிய திட்டம், ரியல் எஸ்டேட் ஆகியவற்றைப் பொறுத்த முறையான சிந்தனையும் தெளிவான திட்டமும் அவசியம். அதற்கு SHS அட்வைசரி குரூப்பை அணுகுதல் அவசியம். தனி நபர்களுக்கு மட்டுமல்லாமல், நிறுவனங்களுக்கும் ஆலோசனை SHS அட்வைசரி குரூப் வழங்கி வருகிறது. நொடிந்துப் போன நிலையில் இருக்கும் நிறுவனம் எழுந்து நிற்க தக்க ஆலோசனைகளை வழங்குகிறது. ஒரு நிறுவனம் வேறொரு நிறுவனத்தை வாங்க விரும்பினால் எத்தகைய நிறுவனத்தை வாங்க முடியும் என்பது குறித்து அடையாளம் கண்டு ஆலோசனைகளை SHS அட்வைசரி குரூப் வழங்குகிறது.

## SHS அட்வைசரி குரூப்பின் நிறுவனங்களுக்கான சேவைகள் ஒரு கண்ணோட்டம்.

•நிறுவனங்களின் வளர்ச்சிக்குத் தேவையான முதலீடுகள், பிரைவேட் ஈக்குவிட்டிகள் போன்றவைகளை SHS-ன் அசோசியேட் நிறுவனமான Fortress Financial Services Limited-யுடன் இணைந்து ஏற்பாடு செய்து தருகிறது.

•நிறுவனங்களுக்கான Investment, Disinvestment இரண்டுக்கும் ஏற்பாடு செய்து தருகிறது நன்கு வளர்ந்து வரும் நிறுவனம் மேலும் பெரிய அளவில் வளர்ந்திட "வென்சர் கேபிட்டல்" என்பதற்கு ஏற்பாடு செய்து தருகிறது.

•வங்கி முதலீட்டு சேவைகளை செய்து தருகிறது.

•நிறுவனங்களின் "பொடன்ஷியல்" தன்மையைக் கவனத்தில் கொண்டு அவற்றுக்கு கடன் மற்றும் ஈக்குவிட்டி பெற்றுத் தர ஏற்பாடு செய்து தருகிறது.

•பங்குசந்தையில் பட்டியலிடப்பட்ட நிறுவனமாக உருவாக்கித் தருகிறது.

•நிறுவனங்களுக்கான இன்சூரன்ஸ், முராவல் இன்சூரன்ஸ் ஏற்பாடு செய்கிறது.

•நிறுவனங்களுக்கான IPO க்கு ஏற்பாடு செய்துதருகிறது ஊடகங்களில் தடம்பதித்த **SHS** ஜெயா டிவியில் ஒளிப்பரப்பாகும் சொக்குதே மனம் நிகழ்ச்சியைத் தயாரிக்கும் பிரியம் என்டர்டெய்னர்ஸ் **SHS** குரூப்பின் ஓர் அங்கம்.

## ஊடகங்களில் தடம்பதித்த SHS

ஜெயா டிவியில் ஒளிப்பரப்பாகும் **சொக்குதே மனம்** நிகழ்ச்சியைத் தயாரிக்கும் பிரியம் என்டர்டெய்னர்ஸ் SHS குரூப்பின் ஓர் அங்கம்.

மக்கள் டிவியில் வளாகம் என்னும் நிகழ்ச்சியின் மூலமாக முதலீடு பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தி வரும் SHS அட்வைசரி குரூப் இது போன்ற முதலீடு சார்ந்த பல நிகழ்ச்சிகளை எதிர்காலத்தில் தயாரித்து வழங்க திட்டமிட்டுள்ளது.

ஆன்லைனில் அதி நவீனத் தொழில்நுட்பம் "போர்ட் ஃபோலியோ மேனேஜ்மென்ட்" பற்றிய வழிமுறைகளை விரைவில் Topline Infonet Pvt. Ltd., மூலமாக அறிமுகப்படுத்த உள்ளதாகவும் திரு. எஸ். நாராயணன் நம்பிக்கையுடன் கூறுகிறார். இந்த வழிமுறையில் ஒருவருடைய இலாப நஷ்டக் கணக்கை பிரின்ட் அவுட் எடுத்துப் பார்த்து விட முடியும் என்று கூறும் இவர், நிதியியல் பற்றிய பரந்த அனுபவத்துக்கும் ஞானத்துக்கும் காரணகர்த்தாக்களாக இன்டகிரேட் என்டர்பிரைசஸ் நிறுவனத்தின் திரு. P. வைத்தியநாதன் மற்றும் திரு. S. காசிநாதன் ஆகியோரை நன்றியுடன் குறிப்பிடுகிறார்.

**உங்கள் நிதி திட்டமிடலுக்கு உடனே தொடர்பு கொள்ளுங்கள் :**




பழைய எண். 6, புதிய எண். 13-B, முதல்மாடி, மூன்றாவது தெரு,
போஸ்டல் காலனி, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.

தொலைபேசி : 044-4212 3051, 4260 5051.

மின்னஞ்சல் : sriharisankarco@shsadvisorygroup.com
shsfinancial@shsadvisorygroup.com

இணையதளம் : www.shsadvisorygroup.com



**அ**டுத்து வரும் திருநாமம் **பந்தமோசனி** - பந்தத்திலிருந்து விடுதலையைத் தரக்கூடியவள். எல்லா ஜீவன்களுக்கும் பந்தத்திலிருந்து விடுதலை தருகிறாள் அம்பிகை. அதற்கப்புறம் வரக்கூடிய திருநாமம், **பந்துராளகா. பந்துராளகா** என்று சிலரும், **பர்பராளகா** என்று சிலரும் இதைச் சொல்வர். இப்படி இரு வேறு அமைப்புகள் இருப்பதை, பாட பேதம் என்று சொல்வார்கள். இது முரண்பாடு இல்லை; சிறு வித்தியாசம். சங்கீதத்திலும் இதுபோன்ற பாட பேதங்கள் அமைவது உண்டு. சில பதிப்புகளில் ஒரு மாதிரியும் மற்ற பதிப்புகளில் வேறு மாதிரியும் ஒரே சொற்றொடர் அமையும். சில சமயங்களில் ஒரு முழு சுலோகமே கூட மாறியிருக்கும்.

# விமர்ச ரூபிணி

## ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம் 16

**பாடபேத காரணங்கள்**

இதுபோன்ற பாட பேதங்கள் வருவதற்குக் காரணம் உண்டு. எத்தனை ஆயிரக் கணக்கான வருஷங்களாக, வாய் வார்த்தையாக வந்து கொண்டிருக்கிறபோது, யாரோ ஒருத்தர் 'இது இப்படித்தான் இருக்க வேண்டும்' என்று வியாக்யான முறையினால் மாற்றியிருக்கலாம்.

பந்துராளகா என்றால், அலை அலையான கூந்தலை உடையவள். (அளகம் என்றால் கூந்தல்.) பர்பராளகா என்றாலும் அர்த்தம் அதுதான். இந்த இடத்தில் பாட பேதம் இருந்தாலும் அர்த்தம் மாறவில்லை.

வேறு சில சமயங்களில் பாட பேதங்களினால் பொருள் மாறுவதும் உண்டு. சிவபுராணத்தில் மாணிக்கவாசகர், 'நமச்சிவாய வாழ்க; நாதன் தாள் வாழ்க, இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்று பாடிக் கொண்டே வந்து, 'கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க' என்று அமைத்துப் பாடியிருக்கிறார்.

இது குருமணி+தன் தாள் வாழ்க என்று பிரித்துக் கொள்ளத்தக்கது. 'அவன்தான் செய்தான்' என்று எழுதுகிறபோது, அவன் + தான் சேர்த்துத்தான் எழுத வேண்டும். 'அவன் தான் செய்தான்' என்று பிரித்து எழுதினால் பொருள் மாறிவிடும்.

பாரத தேச மொழிகளில் இருக்கக்கூடிய சிக்கல் இதுதான். எந்த வார்த்தையை எங்கே கொண்டு கோக்க வேண்டும் என்பதைத் தெரிந்து செய்ய வேண்டும். அப்படிக் கொண்டுபோய் ஒட்டுகிறபோது தான் அர்த்தமே (பாடலுக்கு) சரியாகப் புரியும். இங்கே நிறுத்துக் குறிகள் அவசியம் இல்லை. மொழி தெரிந்தவர்களுக்கு, வார்த்தையை எங்கே கொண்டு போய்ச் சேர்த்து அர்த்தம் புரிந்துகொள்ள வேண்டும் என்பது தெரியும்.

பழைய பதிப்புகளில் (சிவபுராணம்) பார்த்தால் தேசன் அடி போற்றி சிவன் சேவடி போற்றி என்று இருக்கும். காலப் போக்கில், இருநூறு முந்நூறு வருடங்களில் தேசன் என்பது தேயன் என்று மாறிப் போய்விட்டது. அதற்கப்புறம் அது தேயன்

என்றும் மாறிப் போய்விட்டது! நேச முடையவன் ஈசன் என்பதால் 'நேசன்' என்பதாகத்தான் இருக்க வேண்டும் என் கிற எண்ணத்தில் இந்த மாற்றம் ஏற் பட்டிருக்க வேண்டும்.

'தேசன்' என்பது 'தேயம்' என்று மாறிய கட்டத்தில் 'தேயம்' சரியாகப் பொருந்த வில்லை என்பதால் 'தேசன்' ஆக மாற்றப் பெற்றது. ஆதி வடிவம் தேசன் என்பது தான்.

தேசன் என்பது எங்கிருந்து வந்த வார்த்தை? 'தேஜஸ்' என்பதிலிருந்து வந்த வார்த்தை. ஆண்டாள் நாச்சியார் பாடுகிற போது 'தேசமுடையாய் திறவேலோர் எம்பாவாய்' என்று பாடுவாள். 'தேஜஸ் - ஒளி பொருந்தியவளே!' என்பதுதான் அர்த்தம்.

சொல்லினுடைய வேர் எதுவென்று தெரியாமல் மாற்றங்கள் செய்கிறபோது, தேசம் என்பது 'நேசம்' என்று மாறிப் போய்விடுகிறது! பகவானுக்கும் அம்பா ளுக்கும் என்ன வர்ணனை சொன்னாலும் பொருந்தி வரும் என்பதால் இந்த மாற்றங் கள் கேள்விக்குட்படாமல் தங்கிப் போகின் றன!

இப்படித்தான் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத் திலும் சில பாட பேதங்கள் உண்டாயின. **பர்ப்பராளகா - பந்துராளகா** என்கிற பேதம் அவற்றுள் ஒன்று.

## சிவத்தின் விசை

**விமர்ச ரூபிணி** - இது அழகான நாமம்; ஆழமான நாமம். பரமேசுவரனுடைய விமர்சமாக இருக்கக்கூடியவள் என்று பொருள். நிர்க்குணமாக இருக்கும் சிவத்தை ஆட்டுவிக்கக்கூடியவள். அதற் கேற்ற குணங்களோடு திருவவதாரம் செய்யக்கூடியவள் அம்பிகை.

சிவம் என்கிற ஆற்றல் அமைதியாக உறைந்திருக்கிறது - மின்சாரத் தொடர்பு



போல. மின்தொடர்பை இயக்க ஒரு விசை (ஸ்விட்ச்) இருக்கிற மாதிரி, சிவத்தை இயக்க அம்பாள் என்கிற சக்தி இருக் கிறாள். மின்சாரம் என்ன வடிவத்தில் இருக்கிறது என்று நமக்குத் தெரியாது; சொல்ல முடியாது. ஆனால் விசையை இயக்குகிறபோது, அதே மின்சாரம் விளக்கை எரியச் செய்து ஒளியாகப் பிரகா சிக்கிறது. இப்படி உள்ளே உறையும் சக்தியை வெளிப்படச் செய்யக்கூடிய தன்மை அம்பாளுக்கு இருக்கிறது. அப்படி வெளிப்படுகிற ஒளியாக, பல்வேறு தன்மைகளாக இருப்பவளும் அவளே. இந்தப் பல்வேறு வெளிப்பாடுகளை விமர் சங்கள் என்று சொல்வது. எல்லா படைப்பு களிலும் பரம்பொருள் இருக்கிறது என்

நால், அந்தப் படைப்புகளாகவும், அவற்றைப் பார்த்து அனுபவிக்கிற மனித ரூபமாகவும், அவற்றை வெளிப்படச் செய்கிறவள் அம்பாள் - விமர்ச ரூபிணி.

சமயாசார வழிபாடு, கௌலாசார வழிபாடு என்று இரண்டு இந்த அடிப்படையில்தான் வந்தது. அண்ட - பகிரண்டமே அம்பாள்தான். அந்த அண்ட பகிரண்டத்துக்கு இரண்டு கண்களைச் சொல்ல வேண்டுமானால், சூரியனையும் சந்திரனையும்தான் சொல்ல வேண்டும். அவைதானே இருப்பதிலேயே பிரகாசமானவை! ஒரு மனித உருவத்தைப் பார்க்கிறபோது, அதில் மிகப் பிரகாசமாக முதலில் தெரிபவை கண்கள்தான். விலங்கு ரூபமாக இருந்தாலும் இப்படித்தான்.

மனித ஸ்வரூபமாகப் பார்க்கிறபோது, அம்பாளுடைய கண்களைக் கண்களாகப் பார்க்கிறோம். அதையே கௌலாசார ரீதியில் பார்க்கிறபோது அண்டத்திலேயே அதிக பிரகாசமாகத் தெரிகிற சூரியனையும் சந்திரனையும் அம்பாளுடைய கண்களாகக் கொண்டு பார்க்கிறோம். சரி, நடுவே நெற்றிக்கண் இருக்கிறதே என்றால், சூரியன் - சந்திரன் இவற்றோடு, ஒளியைத் தருகிற இன்னொன்றும் சேர்கிறது - அக்னி! அதைக் கொண்டுபோய் மூன்றாவது கண்ணாக வைத்தாயிற்று!

இந்த வழிபாட்டு முறை எப்படி வந்தது? அம்பாள்தான் எல்லாமாகத் தெரிகிறாள் - கண்ணுக்குப் புலனாகும் பொருட்களாக, காதுக்குக் கேட்கும் சப்தங்களாக, கைக்குப் புலப்படும் உணர்வுகளாக எல்லாவற்றிலும் அம்பாளே தெரிவதால் அவள் விமர்ச ரூபிணி. அவளைக் கௌலாசார ரீதியில் இப்படிப் பல்வேறு அனுபவங்களாக வழிபடுகிற முறை உண்டாயிற்று.

இது எல்லா இடங்களிலும், எல்லா ஊர்களிலும் உண்டு. நாம் நவராத்திரி கொண்டாடுகிற மாதிரி வங்காளத்தில் துர்கா பூஜை என்று கொண்டாடுவார்கள். அதற்கு அவர்கள் சொல்கிற அர்த்தம் என்னவென்றால், புகுந்த வீட்டுக்குப் போயிருக்கக்கூடிய உமாதேவி, பிறந்த வீட்டுக்கு இரண்டு - மூன்று நாட்கள் திரும்ப வருகிறாளாம் நவராத்திரியின் போது. அதில் என்ன ஒரு சிறப்பு என்றால், அவள் நேரே பிறந்த வீட்டுக்குள் வரமாட்டாள்...! பிறந்த வீட்டுக்கு வரும்முன், இரவு ஒரு மரத்தடியிலே தங்கியிருக்கிறாள். அதன் பிறகே பிறந்த வீட்டுக்கு வந்து தங்கி, திரும்புகிறாள். அவளைத் திரும்ப வழியனுப்பும்போது, நாம் விநாயகரை ஊர்வலமாக எடுத்துச் செல்கிற மாதிரி, ஊர்வலமாகச் சென்று கடலிலே சேர்ப்பார்கள். துர்கா விஸர்ஜனம் என்று இதற்குப் பெயர். அவள் கைலாயத்துக்குத் திரும்பவும் செல்கிறாள் என்று ஐதிகம்.

**பூமியில் நாம் காணும் பொருட்களிலெல்லாம் உறைபவளாதலால் 'விமர்ச ரூபிணி' என்கிற திருநாமம் ஏற்பட்டது.**

மரத்தடியிலே தங்க வைப்பது என்பது ஏன் வந்தது? மரமானாலும் செடியானாலும் கொடியானாலும் அம்பாள் அதிலே இருக்கிறாள் என்பதனால் வந்தது இந்த வழக்கம். அப்படி, பூமியில் நாம் காணும் பொருட்களிலெல்லாம் உறைபவளாதலால் **விமர்ச ரூபிணி** என்கிற திருநாமம் ஏற்பட்டது.

**(வளரும்)**

ஒரு துறைக்காக அமைக்கப்பட்ட கட்டிடம். அதற்கு அகில இந்திய அளவில் 'நெம்பர் ஒன்' என இரண்டு விருதுகள். அந்தக் கட்டிடத்தில் இயங்கும் துறையானது, கல்வித் தரத்திலும் தனியார்களில் அகில இந்திய அளவில் 'நெம்பர் ஒன்!'. மனசுக்குள் ஆயிரம் 'ஓ!' போட்டுக் கொண்டிருக்கின்றனர், தஞ்சை சாஸ்த்ரா பல்கலைக்கழகத்தின் பயோ-டெக்னாலஜி மாணவ - மாணவியர்.

தஞ்சை, சாஸ்த்ரா பல்கலைக்கழக வளாகத்தில் அமைந்துள்ளது பயோடெக் பார்க். ''பல்கலை நிர்வாகம் எங்களை அணுகி, பயோ டெக்னாலஜி எனப்படும் உயிரியல் துறைக்கு ஒரு உயர்தரமான கட்டிடம் கட்டித் தரப்பட வேண்டும் என்றனர். மிகச் சிறப்பாகக் கட்டித் தர அதிக முயற்சிகள் மேற்கொண்டோம். எங்கள் உழைப்போடு கட்டிடக் கலையில் புகுத்தியிருந்த நுணுக்கங்களும், உயர் தரமும் 'பயோடெக் பார்க்' பில்டிங்குக்கென இரண்டு விருதுகள் பெற்றுத் தந்துள்ளன!'' எனக் கூறுகிறார் சென்னையில் இயங்கிவரும் OCI எனப்படும் ஆஸ்கர் அண்ட் பொன்னி கட்டிடக் கலை நிறுவனத்தின் இயக்குநர் பொன்னி கான்சிஸ்சா (Ponni M.Concessao).

தஞ்சையில் இரண்டு லட்சம் சதுர அடி பரப்பில் 'ஜீவசைதன்யா' என்கிற பெயரில் பயோடெக் பார்க் பிரமாண்டமாய் எழுந்து நிற்கிறது. ஒரு பறவை தன் இரு இறக்கைகளை விரித்து, இரு கால்களையும் காற்றில் நீள விடுவது போல அமைந்துள்ளது கட்டிடத்தின் அமைப்பு. வானிலிருந்து பார்த்தால் அப்படித்தான் தெரியும்!



* எஸ்.ஸ்வாமிநாதன்

இருபுற இறக்கை அமைப்பு கட்டிட முகப்பில், இரு புறங்களிலும் டி.என்.ஏ. குறியீடு; எங்கிருந்து பார்த்தாலும் 'இது உயிரியல் துறை' என்பதை உணர்த்தும் வகையில். தரைத் தளம் சேர்த்து நான்கு மாடி. இதன் மொத்த உயரத்துக்கும், அதன் முகப்பில் உறுதியான தூண்களின் உதவியுடன் குவி மையக் கூரை. அந்தக் கூரையில் பதிக்கப்பட்டுள்ளன Reinforced plastic தகடுகள். அவை அற்புதமான இரண்டு காரியங்கள் செய்கின்றன.



* பொன்னி கான்சிஸ்சா

ஒன்று: கட்டிடத்தின் நான்கு தளங்களிலும் நல்ல வெளிச்சத்தைப் பரப்பும்.

இரண்டு: சூரிய வெப்பத்தினை கீழ் நோக்கிப் புக விடாது.

தரைத் தளத்தின் இதயப் பகுதியில் அமைந்துள்ளது ஆடிட்டோரியம். ஐந்நூறு இருக்கைகள் கொண்டது. கூட்டத்தின் போது காட்டப்படும் காட்சித் திரைக்குப் பதிலாக, வரைபடங்களுடன் குறிப்புகள் சித்திரங்களாக நகரும் வண்ணம் சுவரில்



# விருதுவாங்கிய கட்டடம்

LCD அமைப்பு பொருத்தப்பட்டுள்ளது. இப்படி புதுப்புது யுக்திகள்.

''இந்தியா முழுவதுமாக 165 கட்டிடங்கள் போட்டியிட்டதில் சாஸ்த்ரா பல்கலையின் பயோடெக் பார்க் கட்டிடத்துக்கு 20th Indian Institute of Architects Awards 2008 விருது கிடைத்துள்ளது. மேலும், இந்த ஆண்டுக்கான Indian Building congress Award for Excellence in Built Environment விருதும் கிடைத்துள்ளது. ஒரு கட்டிடத்துக்கு இரண்டு விருதுகள். எங்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி!'' என்கிறார் OCI நிறுவனத்தின் பிரின்சிபல் ஆர்க்கிடெக்ட் ஆஸ்கர் ஜி.கான்சிஸ்சா(Oscar G.Concessao).

''மாணவ-மாணவியரின் கவனம் சிதறாத வண்ணம் வகுப்பறைகள். அவர்களின் இருக்கைகள் காலரி முறையில் அமைக்கப்பட்டுள்ளன. இயற்கை ஒளி பரவும் காற்றோட்டமான அறைகள். அமைதிச் சூழல். பல்கலையின் தேர்ந்த பேராசிரியர்கள். சிறந்த மாணவ மாணவியர். இவையனைத்தும் சேர்ந்து தனியார் உயர்கல்வி நிறுவனம் மற்றும் பல்கலைக் கழக அளவில், இந்தியாவிலேயே எங்கள் பல்கலையின் பயோ டெக்னாலஜி துறை நெம்பர் ஒன் இடத்தில் இருந்து வருகிறது!'' எனக் கூறுகிறார் சாஸ்த்ரா பல்கலைக் கழகத்தின் டீன் மற்றும் நானோ டெக்னாலஜி இயக்குநருமான எஸ்.ஸ்வாமிநாதன்.

- ஸ்ரீரங்கம் திருநாவு

# அம்மா பற்றிய சிறு குறிப்பு :

நான் நல்ல மழையில் நனைந்தபடியே வீட்டுக்குள் வந்தேன்.

அண்ணன் திட்டினான். "ஓரமாக நின்றுவிட்டு மழை நின்ற பின் வரக் கூடாதா?" என்று.

அக்கா திட்டினாள் - "ஏண்டி! குடை யெடுத்துட்டுப் போகக் கூடாதா?" என்று.

அப்பா திட்டினார் - "நன்றாக ஜலதோஷம் பிடிக்கப் போகிறது. மாத்திரை ஏதேனும் போடு" என்று.

தன் முந்தானையால் என் தலையைத் துடைத்துக் கொண்டே அம்மாவும் திட்டினாள்!

என்னையல்ல! மழையை...!

- கிரிஜா ஸ்ரீராம்,
சென்னை - 17



# மின்னல்



## மாப்பிள்ளையின் விலை!

தன் காதலன் தன்னுடைய வீடு தேடி, பெற்றோர்களோடு தன்னைப் பெண் பார்க்க வந்தது ரேவதிக்கு மிகவும் பெருமையாகவும், அதே நேரத்தில் பெற்றோர்களின் ஆசியோடு தன் திருமணம் நடக்கப்போவது பற்றிய சந்தோஷமும் அதிகமாக இருந்தது.

பெண் பார்க்கும் படலம் நல்லபடியாக முடிய...

"அப்புறம்! மற்றதைப் பற்றியும் பேசினால் நன்றாக இருக்குமே..." பையனின்

## பிராக்டிகல்

''நம்ம பையனுக்கு பெரியவங்ககிட்டே எப்படி நடந்துக்கணும்னு தெரியல. துளிக்கூட மரியாதை இல்லாம பேசறான். அவன் இப்படியே வளர்ந்தா நமக்குத்தான் அவமானம். ஸ்கூலில் இதெல்லாம் கத்துத் தர்றதில்லையான்னு டீச்சர்கிட்டே போய்க் கேட்கலாமான்னு பார்க்கிறேன்'' என்று ஐந்து வயது மகனைப் பற்றி, மனைவி செல்வி ஆதங்கத்துடன் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தான் ரமேஷ்.

''சின்னக் குழந்தைங்களுக்கு பெற்றோர்தான் ரோல் மாடல். நாம எப்படி நடந்துக்கறமோ அப்படித்தான் அவங்களும் நடந்துக்குவாங்க. மரியாதையை 'தியரி'யா சொல்லித் தர்றதைவிட, பிராக்டிகலா சொல்லிக்கொடு. அவனோட பாட்டி, தாத்தாகிட்டே மரியாதையா நடந்துக்கப் பாரு... நீ எதிர்பார்க்கிறா மாதிரி, பையனும் திருந்திடுவான்...'' சொல்லிவிட்டு 'சட்'டென வெளியேறினான்.

செல்விக்குப் புரிஞ்சா ஒரே கல்லில் இரண்டு மாங்காய் தானே!

**- எஸ்.ராமன், சென்னை - 17**



# கதைகள்

அம்மா இழுக்கவே,

''முப்பது சவரன் போடறோம். லட்ச ரூபாய் ரொக்கம்... திருமணச் செலவுல பாதி பாதி'' என ரேவதியின் அப்பா கூற,

''இப்படிச் சொல்லிட்டா எப்படி? உங்களுக்கு ஒரே பொண்ணுதானே! அம்பது சவரனும், இரண்டு லட்ச ரூபாய் ரொக்கமும், திருமணச் செலவையும் நீங்களே ஏத்துக்கிட்டால்...'' என இழுக்கவே,

மாப்பிள்ளை குமாரும் தலையாட்ட, ரேவதியால் அதைத் தாங்க முடியவில்லை.

அதுவரை பேசாமலிருந்தவள், ''ஏன் சார் எனக்கும் குமாருக்கும் ஒரே சம்பளம் தானே... அது திருமணத்துக்குப் பிறகு அவருக்குத்தானே!'' என்றாள்.

''ரேவதி!'' என்றான் குமார்.

''ஓ.கே. நீங்க எதிர்பார்த்ததைவிட எங்கப்பா அதிகமாகவே செய்வாரு. ஆனால் ஒரு கண்டிஷன். அதை வாங்கிட்டு உங்க பையன் எங்க வீட்டோட மாப்பிள்ளையா இருக்கணும். உங்க குடும்பத்துக்கும், பையனுக்கும் இனி சம்பந்தமில்லைன்னு நீங்க பத்திரத்துல எழுதித் தரணும். சம்மதமா?''

ரேவதியின் கேள்வியால் நிலை குலைந்து போன அனைவரும். பேசாமல் நடையைக் கட்ட ஆரம்பித்தார்கள்.

**- வெ.ராம்குமார், வேலூர்**

## ஆயிரத்தில் ஒருவன்

# வாகன ஜோதிடர்கள்!




அந்தக் காலத்தில் குட்டி மாரிஸ் மைனர் மற்றும் ஆஸ்டின் கார்கள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. அதே போல படகு போன்ற மெர்சிடிஸ் பென்ஸ் கார் அனைவரையும் அசத்தியது. சின்ன வயதில் இந்தக் கார்களை ஆர்வமுடன் பார்த்து வியந்தான் அந்தச் சிறுவன். இந்த கார்களை உருவாக்கிய டிசைன் நிபுணர்களான அலெக்ஸ் இஸிகோனிஸ் மற்றும் டாக்டர் குடிஉலன் ஹாட் ஆகியோர் அந்தச் சிறுவனின் கதாநாயகர்கள் ஆனார்கள். ஐ.ஐ.டி.யில் படித்து முடித்தவுடன் அமெரிக்காவின் மிகப் பிரபலமான மோட்டார் நிறுவனமான ஜெனரல் மோட்டார்ஸில் வேலை கிடைத்தது. டெட்ராய்டில் உள்ள தலைமை அலுவலகத்தில், வடிவமைப்பு மற்றும் ஆராய்ச்சிப் பிரிவில் வேலைக்குச் சேர்ந்து பதினாறு வருடங்கள் இந்தத் துறையில் தனது அறிவை வளர்த்துக்கொண்டு, திறமைகளையும் வெளிப்படுத்தி, நிர்வாகத்தைப் பிரமிக்க வைத்தார் அவர். ஜெனரல் மோட்டார்ஸ் தயாரித்த முதல் மின்னணு வாகனத்தின் வடிவமைப்பு இவருடையது தான். இன்று பிரபல வாகன நிறுவனமான அசோக் லேலாண்டின் செயல் துணைத் தலைவராக இருக்கும் டாக்டர் சுமந்திரன், வாகன வடிவமைப்பில் உலகில் உள்ள நிபுணர்களில் ஒருவர்.

ஜெனரல் மோட்டார்ஸில் இப்படி ஒரு இந்தியத் திறமையாளர் இருக்கிறார் என்று அறிந்த ரத்தன் டாடா, சுமந்திரனை வளைத்துப் போட்டார். இண்டிகா, இண்டிகோ, ஸஃமோ என்ற டாடாவின் வாகனங்கள், சாலைகளில் ஓடுவதற்குப் பிள்ளையார் சுழிபோட்டு, கருவை உருவாக்கிய நிபுணர் சுமந்திரன்தான். அடுத்து நடுத்தர மக்களின் வாங்கும் ஆளுகைக்கு உட்பட்டு வடிவமைக்கப்பட்டதுதான் லட்ச ரூபாய் காரான டாடா நேனோ. ஐந்து வருடமே டாடா நிறுவனத்தில் பணியாற்றிய சுமந்திரன், தமது அழுத்தமான முத்திரையை அங்கு பதித்துவிட்டார். ஒரு வாகனத்துக்கான கருவை உருவாக்கும் போது கவனிக்கப்பட வேண்டியவை அதன் உள்வசதி, வெளித்தோற்றம், உறுதித்தன்மை மற்றும் மிக முக்கியமாக அது தரப்போகும் எரிபொருள் சிக்கனம். டாடா உருவாக்கிய கார்களை, இந்த அடிப்படை அம்சங்களுக்கு உட்பட்டு வடிவமைத்த டாக்டர் சுமந்திரனை, அசோக் லேலண்ட்

## பாண்டி'S BLOG

இந்தியாவிலேயே டிசைன் தொடர்பான படிப்புக்கு முதன்மை நிறுவனமாக விளங்குவது அகமதாபாத்தில் இருக்கும் தேசிய டிசைன் கழகம் (National Institute of Design). மத்திய அரசால் 1961ல் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கழகமே, மிகச் சிறந்த டிசைன் நிபுணர்களை உருவாக்கியிருக்கிறது.

பள்ளியிறுதி வகுப்பு முடித்தவுடன் இதில் சேர்ந்தால், நான்கு வருடப் படிப்பு. இதையும் முடித்த பின்னர், இதில் மேலும் நிபுணத்துவம் பெற, இரண்டரை வருட மேம்படுத்தப்பட்ட படிப்பும் உண்டு. ஜவுளி, ஆயத்த ஆடைகள் மற்றும் தகவல் தொடர்பு தொடர்பான டிசைன் படிப்பு, நாட்டிலேயே இங்கு மட்டும்தான் இருக்கிறது. மிக லேட்டஸ்ட் தொழில்நுட்பத்துடன் கூடிய ஸ்டுடியோக்களும், லேப்களும் இந்தக் கழகத்தில் உள்ளன. ஆண்டுதோறும் 285 டிசைன் நிபுணர்களை இந்தக் கழகம் உருவாக்குகிறது. இந்தக் கழகத்தைத் தவிர டிசைன் படிப்புகள், ஐ.ஐ.டி., இந்திய விஞ்ஞானக் கழகம், தேசிய ஃபாஷன் கழகம் போன்ற அமைப்புகளிலும் கற்றுத்தரப்படுகின்றன. இந்த அமைப்புகள் அனைத்தும் சேர்ந்து, சுமார் ஆயிரம் டிசைன் நிபுணர்களையே வருடத்துக்கு உருவாக்குகின்றன. ஆனால், நமது தேவையோ பத்தாயிரம்! இந்தப் படிப்புகள் மற்றும் டிசைன் கழகத்தைப் பற்றிய விழிப்புணர்வு, இன்னமும் நமது அடித்தட்டு மற்றும் நடுத்தர சமூகத்தைச் சார்ந்த இளைஞர்களுக்கு, சரிவர கொண்டு சேர்க்கப் படவில்லை. இத்துறையில் படித்து வேலை பெற்ற பலர் ஆண்டுக்கு நான்கு லட்சம் வரை ஆரம்பச் சம்பளமே பெறுகிறார்கள்!

நிறுவனம், கொத்திக் கொண்டு சென்று விட்டது.

சென்னைவாசிதான் டாக்டர் சுமந்திரன். ''பறவையைக் கண்டான் விமானம் படைத்தான் - இப்படி கடவுளின் ஒவ்வொரு சிருஷ்டியும் நமக்குக் கற்றுத் தருபவை ஏராளம்'' என்று சொல்கிறார்! இன்று வாகன வடிவமைப்பில் இவரை துரோணராக வைத்துக்






'மாஃபா' பாண்டியராஜன்

கொண்டிருக்கும் ஏகலைவர்கள் நிறைய உண்டு.

**வ**டிவமைப்பில் இரண்டு பிரிவுகள். ஒன்று, நுகர்வோர் பொருட்களுக்கானது, மற்றொன்று தொழிலகங்கள் சார்ந்தது. தொலைக்காட்சி அறிமுகமான புதிதில் அந்தப் பெட்டியை வைப்பதற்கு மிகப் பெரிய மேஜை தேவைப்பட்டது. இன்று காலண்டர் போல தொலைக்காட்சிப் பெட்டிகளைத் தொங்க விட்டு விடலாம். எந்த வீட்டு உபயோகப் பொருளை

* சுமந்திரன்






**"கடவுளின் ஒவ்வொரு சிருஷ்டியும் நமக்குக் கற்றுத் தருபவை ஏராளம்!"**

எடுத்துக்கொண்டாலும், வளர்ந்து வரும் விஞ்ஞானத்தின் வசதிகளை உள்ளடக்கி உருவத்தைக் குறைத்து, ஆள்வதற்கு வசதியாக பொருட்கள் மார்க்கெட்டில் வந்து கொண்டே இருக்கின்றன. இதற்கெல்லாம் ஆதார சுருதியாக இருப்பவர்கள் டிசைன் நிபுணர்கள்தாம். இன்று பற்பசை, சோப்பு, பவுடர் தயாரிக்கும் நிறுவனங்கள்கூட டிசைன் நிபுணர்களின் உதவியை நாடுகின்றன. நுகர்வோர் ப்ராடக்டுகளில் சிறந்து விளங்கும் ஹிந்துஸ்தான் யுனிலீவர் மற்றும் ப்ராக்டர் அண்ட் கேம்பில் நிறுவனங்களுக்கிடையில் பெரிய டிசைன் யுத்தமே நடக்கிறது. பாண்டலூன் போன்ற ஆயத்த ஆடை நிறுவனங்கள் தங்கள் நிபுணர்களைத் தவிர, வெளி டிசைன் நிபுணர்களையும் பயன்படுத்திக் கொள்கிறார்கள். இதனால் ஃப்ரீலான்ஸ் டிசைன் நிபுணர்கள் சக்கை போடு போடுகிறார்கள்.

டிசைன்தான் உற்பத்திப் பொருளின் ஜாதகம்! இந்த ஜாதகத்தைக் கணிக்கும் போது ஏதாவது தவறு நேருமேயானால், மொத்த முயற்சியும் வீணாகி நிறுவனம் போண்டியாகிவிடும்.

இந்த டிசைன் துறையின் முக்கியத்துவம் கடந்த ஐந்து வருடங்களில்தான் மிகப் பெரிய அங்கீகாரத்தைப் பெற்று, மரியாதையை வரவழைத்துக் கொடுத்திருக்கிறது. வடிவமைப்பு நிபுணர்களின் பங்களிப்பு பொதுமக்களின் பார்வைக்கு வராமல் இருந்த காலம் போய், இன்று இந்தத் துறை மகத்துவம் பெற்றிருக்கிறது. ஆடை வடிவமைப்பு நிபுணர்கள் ஒரு வி.வி.ஐ.பி. அளவுக்கு உயர்த்தப்படுகிறார்கள். அவர்களைப் பற்றி பத்திரிகைகளில் கவர் ஸ்டோரி போடுகிறார்கள். எனவே வருமானமும், பிரபலம் ஆகும் வாய்ப்பும் உள்ள இந்த டிசைன் துறையைக் குறிவைத்து, நமது இளைஞர்கள் படிப்பைத் தொடர வேண்டும். பிரம்மாக்களாக உருவாக வேண்டும்.

*(வெளிச்சம் வீசும்)*

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

# நீங்கள் கேட்டவை

# -தராசு



● ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்

? ''கார்கரே மரணம் தொடர்பாக நான் கூறிய கருத்துகளுக்காகப் பெருமைப் படுகிறேன்'' என்று பதவி விலகிய அந்துலே சொல்லியிருக்கிறாரே?

! பதவி விலகினாரா? எப்போது? அவரது ராஜினாமாதான் ஏற்கப்படவில்லையே! முந்தைய அபத்தப் பேச்சுக்காக இல்லாவிட்டாலும் அதை அடுத்த ஆணவப் பேச்சுக்காகவேனும் ராஜினாமா கடிதத்தைத் தேடி எடுத்து ஏற்கலாம்.

● பி.என்.ஜெய்சங்கர், திருவாரூர்

? கூட்டுக் குடும்பத்தின் வெற்றி விட்டுக் கொடுப்பதிலா? அல்லது அரவணைத்துச் செல்வதிலா?

! எந்தக் குடும்பத்தைப் பற்றிக் கேட்கிறீர்கள் என்று எமக்குப் புரிகிறது. உடைந்த தேங்காயை ஒட்ட வைத்தாலும் ரொம்ப நாள் நிலைக்காதுங்க.

# பூரண மதுவிலக்கின் முதல்கட்ட வெற்றியா?

● தி.வி.கிருஷ்ணமூர்த்தி, மும்பை

? 22.12.2008 அன்று நான்கு மசோதாக்கள்; மறுநாள் பதினேழு நிமிடங்களில் எட்டு மசோதாக்கள் - ஏற்று, நிறைவேற்றவும்பட்டுள்ளனவே நாடாளுமன்றத்தில்?

! வேறொன்றுமே வேண்டாம்; ஒவ்வொரு எம்.பி.யும் எம்.எல்.ஏவும் சபாநாயகருக்குப் பூரண ஒத்துழைப்புத் தர வேண்டும் என்று பதவிப் பிரமாணத்திலேயே சேர்த்து, மீறினால் பதவி இழப்பு என்று விதித்துவிட்டால் போதும். எல்லாம் ஒழுங்காக நடக்கும். சபாநாயகர் ஒரு வேளை ரொம்ப பாரபட்சமாக நடந்து கொண்டால் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வரலாமே!

● பி.என்.ஜெயக்குமார், திருவாரூர்

? கல்லூரி மாணவிகள் மீது ஆசிட் வீசிய மூன்று மாணவர்களை, ஆந்திர போலீசார் சுட்டுக் கொலை செய்தது ஒரு தவறான முன்னுதாரணம் ஆகி விடாதா?

! அபாயகரமான முன்னுதாரணமும் கூட. மாணவர்களை வளைத்துப் பிடிக்க முடியாத அளவுக்கு போலீஸ் கையாலாகாமல் போய்விட்டதா?! தொழில்முறை கிரிமினல்களைத்தான் பொதுவாக என்கவுன்டர்களில் போட்டுத் தள்ளுவார்கள். அதற்கே எதிர்ப்பு உண்டு என்கிற போது...

● அகிலா அன்புமணி, ஈரோடு

? பாகிஸ்தானுடன் அந்நாட்டில் நாம்

ஆடவிருந்த கிரிக்கெட் பந்தயங்கள் ரத்தானது பற்றி?

! அயல் உறவு அரசியல் கிரிக்கெட்டில் பணநாயகத்துடன் அழுகுணி ஆட்டமும் வன்முறையும் புகுந்துகொண்டதால், அசல் கிரிக்கெட்டும் பாதிக்கப்படுகிறது. கிரிக்கெட் மைதானத்தைச் சிறைச்சாலை போலாக்கி ஆடுவதில், மெய்யான மகிழ்ச்சி பார்வையாளருக்கும் இல்லை; விளையாடுவோருக்கும் இல்லை.

● ஜெ.துரைராஜ், சென்னை-116

? உ.பி.எஞ்சினீயர் மனோஜ் குப்தா, மாயாவதியின் பிறந்த நாள் நிதிக்காகப் பணம் கொடுக்க மறுத்ததால், பி.எஸ்.பி. எம்.எல்.ஏ.வால் கொலை செய்யப்பட்டது பற்றி?

! மாயாவதி இதை மறுத்து மாயாஜாலம் செய்தபோதிலும் உண்மைகள் படிப்படியாக வெளிப்பட்ட வண்ணம் உள்ளன. வோட்டுக்களையும் பணத்தையும் திரட்டித்தர வேண்டும் என்பதற்காக, குற்றவாளிகளை கட்சிக்குள் குடிபுகவிட்டால், இப்படித்தான் விபரீதங்கள் விளையும்.

● பொன்விழி, அன்னூர்

? யாரிடம் கடன் கேட்கக் கூடாது?

! யாரிடமும்!

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? அஜ்மல் குறித்து நவாஸ் ஷெரீஃப் கூறியுள்ள தகவல் துரதிர்ஷ்டவசமானது என்கிறதே பாகிஸ்தான் அரசு?

! நவாஸ் ஷெரீஃப் முதலில் எதிர்க்கட்சித் தலைவராகவும் பின்னர் பச்சை பாகிஸ்தானியாகவும் பச்சோந்தி அவதாரம் எடுத்திருக்கிறார். ஒருமித்த குரலில் பேச வேண்டும் என்பதற்காக சத்தியத்தைக் கைவிடுவோரை உலகம் மதிக்காது.



* பச்சோந்தி அவதாரம்!



* அபத்த ஆணவம்

● பா.அசோக், திருவில்லிப்புத்தூர்

? "தி.மு.க. ஆட்சியில்தான் புலிகள் ஆதரவு கோஷம், கூக்குரல், பேச்சு எல்லாமே அதிக அளவில் இருக்கின்றன. அ.தி.மு.க. ஆட்சியில் அதுபோல் யாரும் பேச முடியாது" என்கிறான் என் நண்பன். இது சரிதானா?

! சரிதான். ஆளும் கட்சியின் நிலைப்பாடு ஆதரவாக இல்லாவிட்டாலும், அனுதாபமாக இருந்தாலே போதுமே இத்தகைய சூழல் உருவாக.

● மதுரை முருகேசன், தஞ்சாவூர்

? இரவு ஒரு மணி நேரம் முன்பாக டாஸ்மாக் கடைகளை மூடுவதன் மூலம், பூரண மதுவிலக்கு அமலாக்கத்தின் முதல் கட்ட வெற்றியை அடைந்துவிட்டோமா?

! ஓஹோஹோ! ஹா! ஹா! ஹா! இதைவிடப் பெரிய ஜோக் ஒன்று உண்டு என்றால் அது, தி.மு.க. பொதுக் குழு, 'படிப்படியாகப் பூரண மதுவிலக்கு நோக்கி தி.மு.க. அரசு செல்ல வேண்டும்' என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறதாம்!

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்:

பி.என்.ஜெயகுமார், திருவாரூர்

சிரித்து மாளலை போங்க! இரண்டு தலை முறைத் தமிழர்களைப் பாழுங்கிணற்றில் தள்ளிவிட்டு, இப்போ தாம்புக் கயிறு தேடறாங்க!

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

**? புதிதாக ராணுவம் கண்டுபிடித்துள்ள மிளகாய் கையெறி குண்டுகளினால் தீவிரவாதிகளை எளிதாகப் பிடித்து விடலாம் அல்லவா?**

! அசைாட்படாதிங்க. அந்த குண்டுகளைப் போல் பன்மடங்கு வீரியத்துடன் செயல்படக்கூடிய வெங்காய வெடிகுண்டுகளைத் தீவிரவாதிகள் ஏற்கெனவே கண்டுபிடித்துக் கைவசம் வைத்திருப்பர்!

● என்.காளிதாஸ், சிதம்பரம்

**? இந்து யாத்திரைகளுக்கும் சலுகை அளிக்க வேண்டும் என அர்ஜுன் சம்பத் வலியுறுத்தியுள்ளாரே?**

! ஹஜ் யாத்திரிகர்களுக்குச் சலுகை அளிக்கப்படுவதால் எழுந்துள்ள கோரிக்கை. ஹஜ் யாத்திரைகளுக்குக்கூட முஸ்லிம் அமைப்புகள் உதவ வேண்டுமே தவிர, அரசு அல்ல. அரசு பாரபட்சமாக நடந்துகொள்வதாக புகார் எழவே வாய்ப்புகள் அதிகம். வோட்டு வங்கி அரசியல் நிவாலாகவும் கூடும்.

● ரா.பிரசன்னா, மதுரை

**? பயங்கரவாதச் சம்பவங்களை நேரடியாக ஒளிபரப்ப சானல்களுக்குத் தடை விதிக்கப் பட்டுள்ளதே?**

! அது தடையல்ல; மீடியா சுயக் கட்டுப்பாட்டைக் கைக் கொள்ள வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. ஆணைக்கு அவசியமின்றியே கடைப்பிடிக்கப்பட வேண்டிய நெறி அது. நினைவூட்டலுக்கு அவசியம் ஏற்பட்டுள்ளது என்பதே தலைகுனிவுதான் மீடியாவுக்கு.

● ஷோபனா கிருஷ்ணமூர்த்தி, பெங்களூரு

**? இங்கிலாந்து பாராளுமன்ற துணை சபாநாயகராக ஸ்வராஜ் பால் என்ற இந்தியர் பதவியேற்றதை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

! இன்று அவர் பிரிட்டிஷ் பிரஜைதான் என்றாலும், நம்மை ஆண்டவர்களின் மண்ணில் நம்மவர் துணை-சபாநாயகர் என்கிற குட்டி சந்தோஷம்! அப்புறம், அவர்கள் ஏற்கும் அளவில் ஸ்வராஜ் பாலுக்கு இருந்த தகுதி, பண்பாடு போன்றவை பெருமிதம் அளிக்கின்றன. ●


* இந்திய சந்தோஷம்


* மாயாஜாலவதி!


* யாத்திரைச் சலுகை!

*** ரூ.50/- பரிசு பெறுபவர்:**

**தி.வி.கிருஷ்ணமூர்த்தி, மும்பை**

***ஒருவருக்குப் புற்றுநோய் ஏற்பட்டால் அதற்கு ஏதாவது ஒரு காரணம் (புகைப் பழக்கம் என்பது போல்) சொல்வார்கள். ஆனால் எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாதவர்களும் புற்றுநோயால் பாதிக்கப்படுவது சகஜமாக இருக்கிறது. இப்படிப்பட்டவர்களின் உடலில் பல்வேறு சத்துக் குறைகள் (Multiple Nutritional Deficiencies) இருக்க வாய்ப்புண்டா? அவரது பரம்பரை, சுற்றுச்சூழல், உணவுப்பழக்கம், வாழ்க்கை முறை போன்ற பலவும் இதற்குக் காரணமா? இந்தக் குறைகளை மாற்றி அமைத்துக்கொள்ள உணவுப்பழக்கத்திலும் பிற வாழ்க்கை முறைகளிலும் சரியான மாறுதல்கள் கொண்டு வர முடியுமா? இவற்றுக்கெல்லாம் பதிலளித்து புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சியுள்ளது அமெரிக்காவின் பிரபல ஜான் ஹாப்கின்ஸ் மருத்துவக் கழகம்.***

புற்றுநோய் செல்கள் ஒவ்வொரு மனிதனின் உடலிலும் உள்ளன என்பது தெரியுமா? மிக ஆரோக்கியமானவரின் உடலிலும் கூடத்தான்! இவை சில லட்சம் என்கிற அளவிலாவது பெருகும்போது தான் அவற்றைச் சோதனைகளின் மூலம் கண்டுபிடிக்க முடியும். எனவே, சோதனைகளுக்குப் பிறகு, ''உங்களுக்குப் புற்றுநோய் இல்லை'' என்று டாக்டர் கூறினால் அதற்கான அர்த்தம், 'சோதனைகள் வெளிப்படுத்தும் அளவுக்கு மிக அதிகளவில் புற்றுநோய் செல்கள் இல்லை' என்பதுதான்.

ஆயுளில் ஆறு முதல் பத்து



தடவைகள் வரை புற்றுநோய் செல்கள் மனிதனின் உடலில் உருவாகின்றன. நம் உடலில் உள்ள நோய் எதிர்ப்புச் சக்தி இந்தச் செல்களை அழிக்கின்றது. அவை பெருகாமலும் கட்டிகளாக உருமாறாமலும் பார்த்துக் கொள்கின்றது.

புற்றுநோய்க்கான சிகிச்சையின் தொடக்கக் கட்டங்களில் கீமோதெரபியும் கதிரியக்கச் சிகிச்சையும் தொடர்ந்து அளிக்கும்போது பலனளித்தாலும், பலன் மிகவும் குறைந்துவிடுகிறது. காரணம், புற்றுநோய் செல்கள் இந்தச் சிகிச்சைகளுக்கு எதிரான தடுப்பு சக்தியைப் பெற்றுவிடுவதுதான்!

பின் எப்படித்தான் புற்றுநோயுடன்

போராட? புற்றுநோய் செல்களை பட்டினி போடுவதன் மூலமாகத்தான்! எப்படிப் பட்டினி போடலாம்? அவை உயிர் வாழத் தேவைப்படும் உணவு வகைகளை அளிக் காமல் இருப்பதன் மூலமாகத்தான்.

புற்றுநோய் செல்கள் வளர்வதற்கான சாதகமான முக்கிய உணவு என்ன தெரியுமா?

★ முதலிடம் வகிப்பது சர்க்கரை. சர்க்கரை உட்கொள்வதை நாம் நிறுத்தி னால், புற்றுநோய் செல்களின் மிக முக்கிய மான உணவை நாம் நிறுத்திவிடுகிறோம் என்றுதான் அர்த்தமாம்.

தவிர்ப்பது நல்லது.

★ உணவில் இருபது சதவிகிதம் மட்டுமே சமைக்கப்பட்டதாக இருக்க வேண்டும். எண்பது சதவிகித உணவு பச்சைக் காய்கறிகள், பழச்சாறுகள், பருப்பு கள், பழங்கள் போன்றவையாக இருக்க வேண்டும்.

★ காப்பி, தேநீர், சாக்லேட் ஆகிய வற்றைத் தவிர்த்துவிடுதல் நல்லது.

★ முக்கியமாக ஆக்ஸிஜன் நிறைந்த சூழலில் புற்றுநோய் செல்கள் தாக்குப் பிடிப்பது கஷ்டம். தினசரி உடற்பயிற்சி, ஆழ்ந்த சுவாசப் பயிற்சி ஆகியவை நம்

# புற்றுக்குப் பால் வார்க்காதே?





★ பால் அருந்தும்போது நம் உணவுப் பாதையில் அது ஒருவித சளி போன்ற வடிவம் எடுக்கிறது. இது புற்றுநோய் செல் கள் வளர வசதியான சூழல். பாலுக்குப் பதில் சோயா பால் அருந்தலாம்.

★ அமிலச் சூழல் என்றால் புற்றுநோய் செல்களுக்குக் கொண்டாட்டம். இறைச்சி உணவு அமிலச் சூழலை எளிதாக ஏற் படுத்துகிறது. எனவே இறைச்சியைத்

உடலில் உள்ள ஆக்ஸிஜன் அளவை அதி கரிக்கச் செய்யும்.

ஆக, ரத்தக் கொதிப்பு, நீரிழிவு நோய், இதயநோய் போன்றவற்றுக்கெல்லாம் என் னென்ன மாற்றங்களைக் கொண்டு வரச் சொல்வார்களோ, அவற்றில் பெரும் பாலானவை புற்றுநோய்ச் சிகிச்சை மற்றும் தடுப்புக்கும் பலனளிப்பவைதான்!

**- ஜி.எஸ்.எஸ்.**



## ராதிகா

குப் பதிலாக வேறு நடிகையைப் போட்டு எடுக்கலாம் என்கிற எண்ணத்துக்கு வந்தேன். சில நடிகைகளிடம் பேச்சுவார்த்தையும் நடந்துகொண்டிருந்தது. கலாநிதி மாறன் அப்போது அமெரிக்காவில் இருந்தார். அவரிடம் விஷயத்தைச் சொன்னேன்.

அவர் என் உடல் நிலையைப் பற்றி எப்படிப் புரிந்துகொண்டாரோ தெரியவில்லை. ''என்ன ஆனாலும் நீ நடிச்சே ஆகணும். ஒம்பதரை மணிக்கு சன் டி.வி.யில உன்னைப் பார்த்துப் பார்த்து மக்கள் பழகிட்டாங்க'' என்று

# "பிடிவாதம் பிடித்த

''அப்படியெல்லாம் ஒண்ணும் ஆகாது. பயப்படாதே! முதல்ல ஒரு ஸ்கேன் எடுத்துப் பார்த்துடுவோம்'' என்றார் என் கணவர் சரத்குமார்.

ஆனால், ஸ்கேன் எடுப்பதற்காகக் கூட நான் நடக்கக்கூடாது என்பது டாக்டர்கள் உத்தரவு.

என் கணவர் ஸ்கேன் மெஷினை நான் இருக்கும் இடத்துக்கே கொண்டு வர ஏற்பாடு செய்தார். ஸ்கேன் எடுத்தார்கள். வயிற்றிலிருந்த குழந்தைக்கு ஒன்றும் ஆகவில்லை.

'அண்ணாமலை' தொடர் நன்றாகப் போய்க் கொண்டிருந்தது. ஆனால், என்னால் தொடர்ந்து அதில் நடிக்க முடியுமா என்கிற கவலை. மறுபடியும் எனக்



சொல்லிவிட்டார். அதற்குப் பிறகு என்ன செய்வது?

சரி. என்னதான் நடக்கிறது பார்த்துவிடுவோமே என்கிற அசட்டுத் துணிச்சல் என்றுகூடச் சொல்லலாம்; நான் மருத்துவமனையிலேயே தங்கினேன். அதற்குப் பக்கத்துக் கட்டடத்தில் 'அண்ணாமலை' ஷூட்டிங் நடக்க ஏற்பாடு செய்தேன். மருத்துவமனையிலிருந்து மெதுவாக நடந்து அங்கே போவேன். ரொம்ப சிரமப்படுத்திக் கொள்ளாமல் உட்கார்ந்தே நடித்தேன்.

உட்கார்ந்த இடத்திலேயே டப்பிங், நிர்வாகம் எல்லாவற்றையும் செய்தேன். அந்த வருடம் ஆகஸ்டில் குழந்தை பிறக்கும் என்று சொன்னார்கள்.

மருத்துவப் பரிசோதனைக்காக போயிருந்தபோது என்னைப் பரி சோதித்த டாக்டர்கள், ''குழந்தைக்குக் கொடி சுற்றியிருக்கிறது. இனிமேலும் தாமதிக்கமுடியாது. ஆபரேஷன் செய்து குழந்தையை வெளியே எடுக்க வேண்டும்'' என்றார்கள். அவ்வளவு சீக்கிரத்தில் இப்படி நடக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அடுத்த நாள் வந்து அட்மிட் ஆவதாகச் சொல்லி விட்டு வந்தேன்.

என் கணவருக்கு ஃபோன் செய் தேன். எங்கேயோ படப்பிடிப்பில் இருந் தவர் ஓடி வந்தார். அவர் வந்தவுடன் குழந்தை எந்த நிலையில் இருக்கிறது என்று பார்ப்பதற்காக ஸ்கேன் செய் தோம். அதற்குப் பிறகு ஷூட்டிங் குக்கோ, ஸ்டூடியோவுக்கோ போக முடியாதில்லையா! அதனால், அன்று விடிய விடிய அதிகாலை ஐந்து மணி வரைக்கும் நான் நடித்திருந்த காட்சி களுக்கு டப்பிங் பேசினேன். அடுத்த நாள் மருத்துவமனையில் சேர்ந்தேன்.

# கலாநிதி மாறன்!"

# 11

**ரா**டன் என்னுடைய நிறுவனம் தான். ஆனால் நான் எதற்காக அவ்வளவு தூரம் கஷ்டப்பட வேண்டும் என்று இப்போது நினைத்தாலும் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையில் அதைத் தொழில் பக்தி என்றுதான் சொல்லவேண்டும். அடுத்த தலைமுறை நடிகர்களுக்கும் நடிகைகளுக்கும் இதெல்லாம் இருக்குமா என்று தெரிய வில்லை.

''ஐயோ! லேட்டாயிடுச்சே! நம் மளைத் தப்பா நினைச்சுடுவாங்களே! வர்றோம்னு சொல்லிட்டு வரலைன்னா ரொம்ப வருத்தப்படுவாங்களே!'' இதெல்லாம் என் காலத்துச் சிந்தனை. அடுத்த தலைமுறையிடம் இந்தப் பதட்டம் கொஞ்சம்கூட இல்லை என்றுதான் சொல்லவேண்டும். என்னை மாதிரி சிந்திக்கிற ஆட்கள் மிக அரிதா கவே இருக்கிறார்கள்.

எனக்கு ஆபரேஷன் நடந்தது. கொடி சுற்றிக் குழந்தை பிறந்தது.

**'கி**ழக்கு சீமையிலே' படத்தில் நடிக்கும்போது ஒரு விஷயத்தைக் கவனித்தேன். இயக்குநர் பாரதிராஜா சார் அந்தப் படத்தில் வாழ்க்கையில் நாம் அன்றாடம் சந்திக்கிற மனிதர்கள் பலரைச் சித்திரித்திருந்தார். அந்தப் படத்தில் கதைப்படி, எனக்குப் பிறக்கும் குழந்தை கொடி சுற்றிப் பிறக்கும். அண்ணன் விஜயகுமார், குழந்தையைப் பார்க்க வீட்டுக்கு வருவார். மாமன் முறைக்கு சர்க்கரைத் தண்ணீரைக் குழந்தைக்கு வாயில் புகட்டவேண்டும் என்று வருவார். அவரைப் பார்த்து என் மாமியார் திட்டுவார்.

'ஆமா. பொல்லாத சீமையிலே பொறக்காத புள்ளையைப் பார்க்க வந்துட்டீங்க! கொடி சுத்திப் பொறந் திருக்கு. இனிமே என்ன ஆகப் போகுதோ!' என்று குத்தலாகப் பேசு வார். அந்த வசனத்தைப் படம்



பிடித்தபோது எனக்கு ரொம்ப உறுத்தலாக இருந்தது.

நான் பாரதி ராஜா சாரிடமே கேட்டேன். ''என்ன சார் இது! இப்படி

**" முதலில் நடித்தது மாதிரியே சரியாக நடித்து விடுவாயா?" என்றார் பாரதிராஜா.**

எல்லாம் சொன்னீங்கன்னா ஜனங்க இதை நம்பத்தானே செய்வாங்க. மூட நம்பிக்கையை வலியுறுத்துறீங்களே'' என்று அவரிடம் விவாதித்தேன்.

''இல்லல்ல. இதெல்லாம் கிராமத்துல காலம் காலமா இருக்கற விஷயங்கள். அப்படியே சொன்னாத்தான் யதார்த்தமா இருக்கும்'' என்று சொல்லி விட்டார் பாரதிராஜா சார்.

இன்றைக்கு நினைத்துப் பார்த்தால் கூட ஆச்சரியமாக இருக்கிறது. அதைத் தற்செயல் என்று சொல்வதா, அல்லது விதி என்று சொல்வதா? எனக்குத் தெரியவில்லை.

எனக்குக் குழந்தை கொடி சுற்றி பிறந்ததற்குப் பிறகு எங்களுடைய குடும்பத்தில் இருந்த எல்லோருமே எங்களிடமிருந்து தனித்தனியாகப் பிரிந்து போய்விட்டார்கள்.

**வ**லியில்லாமல் எந்தப் பலனும் கிடைக்காது. வாழ்க்கையில் எதுவுமே எளிதில்லை. இதை என்றைக்கும் மறக்க மாட்டேன். அதற்காக எப்போதும் தயாராகவே இருப்பேன். 'கிழக்கு சீமையிலே' படத்தில் ஒரு காட்சி வரும். கதைப்படி, நெப்போலியன் மகளைப் பாண்டியனுக்குத் திருமணம் செய்ய முடிவு செய்திருப்பார். ஓடிப் போன மகளை இழுத்துக்கொண்டு நான் ஒரு வயல்வெளியில் வந்துகொண்டிருப்பேன். எங்களைப் பார்த்துவிடும் நெப்போலியன் ஓங்கி ஒரு எத்துவிடுவார். நான் 'பொத்'தென்று கீழே விழுவேன். பிறகு அவிழ்ந்த கூந்தலை முடிந்து கொண்டு, தலையில் அடித்தபடி ஆவேசமாக அவரிடம் வசனம் பேசுவேன். அந்தக் காட்சி மிகப் பிரமாதமாக வந்திருந்தது.

அந்தக் காட்சியெல்லாம் எடுத்து முடித்தபிறகு, புதிதாக ஒரு பிரச்னை வந்தது. எனக்கு மகளாக நடித்த பெண் வேண்டாம் என்று சொல்லி, வேறொரு பெண்ணை நடிக்க வைத்தார்கள். இப்போது அந்தக் காட்சியை மறுபடியும் எடுக்கவேண்டும். பாரதிராஜா சார் கேட்டார். ''என்ன! முதல்ல பண்ணின மாதிரியே சரியா நடிச்சிடுவியா?''

''கண்டிப்பா பண்ணிடுவேன் சார்'' என்றேன் நான். அப்போது பாரதிராஜா சார் வத்தலக்குண்டிலேயே ஒரு எடிட்டிங் ரூம் வைத்திருந்தார். நான் முதலில் நடித்திருந்த காட்சியை எனக்கு மட்டும் போட்டுக் காட்டியிருந்தார்.

இருந்தாலும், உள்ளுக்குள் ஓர் உதறல் இருக்கத்தான் செய்தது.

''ஸ்டார்ட் கேமரா! டேக்! ஆக்‌ஷன்!'' என்றார் டைரக்டர்.

*(ரயில் வரும்)*

எழுத்தாக்கம் : **பாலுசத்யா**



# காவலில் காதல் சின்னம்!

மும்பையில் நடந்த தீவிரவாதிகள் தாக்குதலை அடுத்து, ஆக்ராவில் தாஜ்மஹால் வளாகத்தில் பாதுகாப்பு பலப்படுத்தப்பட்டுள்ளது. 2002ல் தாஜ்மஹாலைத் தகர்க்க தீவிரவாதிகள் குறி வைத்திருப்பதாக உளவுத்துறை சொன்னதை அடுத்து, தாஜ்மஹால் வளாகம் மத்தியத் தொழிற்பாதுகாப்புப் படையின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தது. அதன் பின் தாஜ்மஹால் வளாகத்தில் வெளி வட்டப் பாதுகாப்புக்காக முந்நூறு உ.பி. மாநில போலீசாரும், உள் வட்டத்தில் நூற்றியெண்பது ஆயுதமேந்திய மத்தியப் பாதுகாப்புப் படையினரும் உள்ளனர். இப்போது உள் வட்டத்தில் கூடுதலாக நூறு பேர் பாதுகாப்புப் பணியில் ஈடுபடுத்தப் படுவார்கள். பௌர்ணமியை ஒட்டிய நான்கு நாட்கள் இரவு நேரத்திலும் தாஜ்மஹாலைக் காண பார்வையாளர்கள் அனுமதிக்கப்படுவதால், அந்த நாட்களில் இன்னும் அலெர்ட்டாக இருக்க பாதுகாப்புப் படையினர் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள்.

மனோஜ் குமார் குப்தா என்ற உ.பி. மாநில பொதுப்பணித்துறை செயற்பொறியாளர் படுகொலை, மாநிலம் முழுவதும் அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்தி இருக்கிறது. இரவோடு இரவாக ஆளும் பி.எஸ்.பி. கட்சி எம்.எல்.ஏ.வான சேகர் திவாரியும், அவரது ஆட்களும், இஞ்சினியரின் வீட்டுக்குள் நுழைந்து, அவரது மனைவியை பாத்ரூமுக்குள் அடைத்துவிட்டு, சரமாரியாக மனோஜ் குப்தாவைத் தாக்கி இருக்கிறார்கள். அத்துடன் விடாமல், ரத்தம் சொட்டச் சொட்ட குப்தாவை



★ சஞ்சய்தத்



★ ராஜ்பாபர்

போலீஸ் ஸ்டேஷனுக்குத் தூக்கிக்கொண்டு போய், ரௌடித்தனம் செய்ததாக இஞ்சினியர் மீது கேஸ் பதிவு செய்யும்படியும் சொல்லி இருக்கிறார் எம்.எல்.ஏ. ஆனால், போலீஸ் அவரை உடனடியாக ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல, அங்கே குப்தா மரணம் அடைந்து விட்டார். உடலில் 32 இடங்களில் காயம்; ஒரு கை பலாத்காரமாக முறிக்கப்பட்டுள்ளது; உடலில் எலெக்டிரிக் ஷாக் கொடுத்திருக்கிறார்கள்; கொத்தாக தலை முடியைப் பிடித்து இழுத்துப் பிடுங்கி சித்ரவதை செய்திருக்கிறார்கள் என்கிறது போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்.

**1991**லிருந்து தொடர்ந்து 5 முறை உ.பி.யின் லக்னோ தொகுதியில் ஜெயித்து பாராளுமன்றத்துக்குச் சென்றவர் வாஜ்பாய். அவரை எதிர்த்துப் போட்டியிட காங்கிரஸுக்கும் சரி, சமாஜ்வாடி கட்சிக்கும் சரி சரியான வேட்பாளர் இல்லை. இந்த முறை வாஜ்பாய் தேர்தலில் போட்டியிடுவாரா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. அவர் போட்டியிட்டால் அவரை எதிர்த்து காங்கிரஸ் - சமாஜ்வாடி கட்சிகளின் பொது வேட்பாளராக நடிகர் சஞ்சய் தத்தை நிறுத்த சோனியாவும், முலாயமும் முடிவு செய்திருப்பதாக ஒரு நியூஸ்.

இந்தி நடிகர் ராஜ்பாபர், சமாஜ்வாடி கட்சி வேட்பாளராக ஆக்ரா தொகுதியிலிருந்து இரண்டுமுறை பாராளுமன்றத்துக்குச் சென்றவர். ஆனால், முலாயமுக்கும் அவருக்கும் இடையில் ஏற்பட்ட பிரச்னை காரணமாக, கட்சியிலிருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டார். அதன்பின் வி.பி. சிங் கட்சியில் இருந்துகொண்டு, ஆக்டிவாக அரசியலில் ஈடுபடாமல் இருந்த ராஜ்பாபர், இப்போது காங்கிரஸில் சேர்ந்திருக்கிறார். ஆனால், ஆக்ராவில் அவர் இப்போது நிற்க முடியாது. காரணம் ஆக்ரா, ரிசர்வ் தொகுதியாக அறிவிக்கப்பட்டுவிட்டது.

**- சந்திரமௌலி**

# ஹாஸ்பிடல் எத்திக்ஸ்

## ஜி.எஸ்.எஸ்.

# "மனிதனைத் தின்னும் மாத்திரைகள்!"

மருத்துவப் படிப்பில் முதலாவதாக வந்தவர்களுக்கு, தங்கப் பதக்கங்களை சம்பந்தப்பட்ட பல்கலைக்கழகங்கள் அளிப்பதுண்டு.

அதே போல், 'வேறொன்றில்' முதலாவதாக வருபவர்களுக்கு குடும்பத்துடன் வெளிநாடு சென்று வரும் வாய்ப்பிலிருந்து, கார் வெகுமதி வரை பலவற்றை அளிப்பதுண்டு. அளிப்பது மருந்துத் தயாரிப்பு நிறுவனங்கள்!

தங்கள் மாத்திரையை பத்து நோயாளிகளுக்குப் பரிந்துரைக்கும் டாக்டருக்கு, ஒரு கூப்பனை வழங்குகிறது ஒரு மருந்துத் தயாரிப்பு நிறுவனம். எல்லா கூப்பன்களின் எண்களும் (லாட்டரி போல) குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்படும். வெற்றி பெற்ற டாக்டர்களுக்குத்தான் மேற்படி மகத்தான அதிர்ஷ்டங்கள்.

மேற்படி விஷயங்களை, பகிரங்கமாகவே தங்கள் வலைத்தளத்தில் அறிவித்த மருந்துத் தயாரிப்பு நிறுவனங்களும் உண்டு.

நமது மனத்தில் எழும் முக்கியமான கேள்வி இதுதான்.

''இப்படிப்பட்ட சூழலில் டாக்டர், நமக்குத் தேவையான மாத்திரைகளைப் பரிந்துரைப்பாரா? அல்லது 'தமக்குத் தேவையான' மாத்திரைகளைப் பரிந்துரைப்பாரா?''

டாக்டர்களுக்கு அளிக்கப்படவேண்டிய பரிசுகளுக்கென்றே, பெரும் தொகையை ஒவ்வொரு வருடமும் மருந்துத் தயாரிப்பு நிறுவனங்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ ஒதுக்குகின்றன.

இது இந்தியாவில் மட்டுமல்ல; உலகம் முழுவதுமே நடக்கிற அநியாயம்தான். ஹார்வர்டு, யேல்

போன்ற பல பல்கலைக்கழகங்கள் இந்தப் போக்குக்குத் தடைவிதித்துள்ளன. எந்த விதமான வெகுமதியையும் மருந்துத் தயாரிப்பு நிறுவனங்கள், டாக்டர்களுக்கு வழங்கக்கூடாது என்கின்றன.

மிகத் தாமதமாக என்றாலும், சமீபத்தில் இந்த விஷயத்தில் ஒரு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. இனி மருந்துத் தயாரிப்பு நிறுவனங்கள், வெளிநாட்டுப் பயணங்கள் எதையும் டாக்டருக்கோ, அவர் குடும்பத்தினருக்கோ பரிசளிக்க மாட்டா. வெகுமதிகளும் ஷாப்பிங் கூப்பன்களும் தடைசெய்யப்படும்.

இது தாங்களாகவே விதித்துக் கொண்டுள்ள ஒரு கட்டுப்பாடு. இந்திய மருந்துப் பொருட்கள் தயாரிப்பு நிறுவனம் (Organisation of Pharmaceutical Producers of India) எடுத்துள்ள முடிவு இது.

இதன் உறுப்பினர்கள் எந்த அளவு இதைச் செயல்படுத்தப்போகிறார்கள் என்பதைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். தவிர எல்லா மருந்துத் தயாரிப்பாளர்களும் இந்த அமைப்பின் உறுப்பினர்கள் அல்ல.

இந்த இடத்தில் இன்னொரு கேள்வியும் எழும் - எழ வேண்டும். இப்படியெல்லாம் விற்பனையை ஊக்குவிக்க செய்யப்படும் செலவினால் மருந்தின் விலையும் ஏறும் அல்லவா?

இதுகுறித்து ஒரு டாக்டர் நம்மிடம் மனம் திறந்து கூறியது இது:

''சந்தேகமே வேண்டாம். மருந்துகளில் கிடைப்பது கொள்ளை லாபம்தான். இதோ சில சாம்பிள்கள்.

குறிப்பிட்ட ப்ராண்டுகளின் பெயர்களைத் தவிர்க்க விரும்புவதால் அந்த மருந்தின் அடிப்படைப் பெயரைச் (generic name) சொல்கிறேன். (இதை விளக்க ஒரு சின்ன உதாரணம். பாரசிடமால் என்பது மருந்தின் அடிப்படைப் பெயர்

**டாக்டர்களுக்கு அளிக்கவேண்டிய பரிசுகளுக்கென்றே பெரும் தொகையை ஒவ்வொரு வருடமும் மருந்துத் தயாரிப்பு நிறுவனங்கள் நேரடியாகவோ மறைமுகமாகவோ ஒதுக்குகின்றன!**

என்றால் க்ரோஸின், மெடாஸின் என்பது ப்ராண்ட் பெயர்கள்)

ஜலதோஷத்துக்கான ஆன்டிபயாடிக் மருந்தின் அடிப்படைப் பெயர் ஸெஃப்ட்ரியாக்ஸோன் (ceftrioxone). மருந்துத் தயாரிப்பு நிறுவனத்திலிருந்து ஒரு டாக்டர் இதை ஒரு கிராம் 17 ரூபாய்க்குப் பெற முடிகிறது. (அடக்க விலை 17 ரூபாயை விடக் குறைவாகவே இருக்க வேண்டும்). ஆனால் இந்த மாத்திரையின் மேலுள்ள உறையில் குறிப்பிடப்படும் விலை 128 ரூபாய்!

டெக்ளோஃபெனக் சோடியம் என்ற வலி நிவாரணி மாத்திரையை, பத்து வில்லைகளுக்குப் பதினைந்து ரூபாய் என்று ஒரு டாக்டரால் பெற முடிகிறது. இதன் சந்தை விலை 380 ரூபாய்.

ஒரு டாக்டரால் வாங்க முடியும் எனும்போது, மருந்துக் கடைக்காரருக்கும் இதே விலையில் அந்த மருந்துத் தயாரிப்பு நிறுவனத்தால் அளிக்க முடியும்.

உயர் ரத்த அழுத்தத்துக்கான ஐந்து மில்லிகிராம் கொண்ட அம்லோடைபின் என்பதில், பத்து மாத்திரைகளின் அதிக பட்ச விற்பனை விலை 25 ரூபாய். டாக்டருக்கும் மருந்தகத்துக்கும் இது வெறும் நான்கு ரூபாய்க்குக் கிடைக்கிறது.

மாத்திரைகள்தான் என்றில்லை, மருத்துவமனைகளில் பயன்படுத்தப்படும் 'ட்ரிப் செட்கள்' (Drip sets) கூட இப்படிக் கொள்ளை லாபத்தில்தான் விற்கப்படுகின்றன.

அரசு இந்த விஷயத்தில் ஏன் மௌனமாக இருக்கிறது?

''மொத்த வியாபாரிக்கு அதிகபட்சம் பதினைந்து சதவிகித லாபமும், சில்லறை வியாபாரிக்கு அதிகபட்சம் 35 சதவிகித லாபமும் மட்டுமே என்கிற அளவில்தான் விலை நிர்ணயம் செய்யப்பட வேண்டும்'' என்கின்றன உச்சவிலை (MRP) தொடர்பான வழிகாட்டுநெறிகள். ஆனால், இவை வெறும் 'கைடுலைன்கள்'தான்; சட்டமாக்கப்படவில்லை. அப்படிச் செய்யாமல் தடுத்தது யார்?

(தொடரும்)



# வழி'மொழி'கிறேன்!

## வட்ட மேஜை

**அ**ந்துலே ராஜினாமா, கார்ட்டூன் மிகவும் அருமை. உண்மை நிலையும் அதுதான்.

**- வி.ஜி. சத்தியநாராயணன், சென்னை-61**

**இ**யக்குநர் ராதாமோகனுக்கு 'அபியும் நானும்' இன்னொரு 'மொழி' எனப் பாராட்டியிருப்பதை நானும் வழி'மொழி'கிறேன்.

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்.**

'**எ**ந்திரன்' படம் கைமாறினால் என்ன! பணக்காரன் மேலும் பணக்காரனாவான். ரூ. 500க்கு பிளாக் டிக்கெட் வாங்கிப் பார்க்கப் போகிற ஏழை மேலும் ஏழையாவான்.

**- அ.யாழினி பர்வதம், சென்னை-78**

**மா**யாவதி கட்சியில் பல பிரபலங்களும், படித்தவர்களும் சேர்ந்து வருவதை திருமாவளவன் மறைக்கப்



பார்ப்பது அபத்தம்.

**- என்.சண்முகம், திருவண்ணாமலை.**

**ப**த்து ரூபாய் செலவில் தமிழ் சினிமா உலகத்தைச் சுற்றி வந்த நிறைவை ஏற்படுத்தியது 'சினிமா ஸ்பெஷல்'.

**- ரேவதிப்ரியன், ஈரோடு-1.**

'**பா**ம்பாலே பாம்பாலே' படித்தாலும் படித்தோம். சிரிப்பில் நெளிய ஆரம்பித்து விட்டோம்.

**- ஜி.வெங்கடரமணன், சென்னை-4**

**ஒ**ரு முழு நீளத் திரைப்படத்தைப் பார்த்த திருப்தியை, கல்கி -சினிமா ஸ்பெஷல் இதழ் தந்தது. அடுத்து வேறென்ன ஸ்பெஷல் தரப் போகிறீர்கள்?

**- லெ.நா. சிவகுமார், சென்னை-33.**

**அ**ஜயன் பாலாவின் 'சிம்லி' கதை, நிஜமா? கற்பனையா? எப்படியிருந்தாலும் நெஞ்சைத் தொட்டது. 'உன் முகத்தைக் கூடப் பார்க்க மாட்டேன்'

என்ற அந்தச் சிறுமியின் கோபம் நியாயமானதே!

- இனிஹரி, சென்னை-4.

பாகிஸ்தானின் சுய உருவம் தெரிந்தும், அதனுடன் வாய்ஜாலம் மூலம் நிழல் யுத்தம் நடத்தி வரும் இந்திய அரசுக்கு, தாங்கள் தலையங்கத்தின் மூலம் கூறிய ஆலோசனைகள் 'நறுக்'.

- என்.சங்கரதாஸ்,
ஸ்ரீவில்லிபுத்தூர்.

டம்மித் துப்பாக்கியை வைத்து, வரவிருந்த பெரிய தகராறை எம்.ஆர். ராதா தடுத்து நிறுத்தியிருக்கிறாரென்றால் ரொம்ப 'தில்'லான ஆள்தான்!

-எம். மிக்கேல்ராஜ், சாத்தூர்.

'அபியும் நானும்' திரைப்பட விமர்சனம் சிம்ப்ளி சூப்பர்ப்!

- இராம.வாணி, திருவாரூர்.

ஹேப்பி நியூ இயர் நியூ(ஸ்) பாய்! சினி சிப்ஸ் தொகுப்பின் ப்ளஸ் பாயின்ட், உன்னோட 'நச்' கமென்ட் தான், ப்ளீஸ் கீப் இட் அப்!

- எஸ். அமிர்தா சௌந்தர்,
சென்னை-26.

யுகபாரதியின் கவிதையும், கவிதைக்கான புகைப்படமும் மென்மை.

-பி.என். ஜெய்குமார்,
திருவாரூர்-2.

திரைப்படங்களில் காட்டப்படும் வன்முறைக் காட்சிகள் எவ்வளவு அபத்தமாக இருக்கின்றன என்பதையும், இதனால் இளையதலைமுறையினர் வன்முறை சார்ந்த மனஉணர்வுகளுக்குத் தள்ளப்படும் நிலையையும் படம்பிடித்துக் காட்டியிருந்தது 'வரவேற்பறை வன்முறை'.

- என் . சண்முகம்,
திருவண்ணாமலை.



''வாழ்க்கையைப் பயணங்கள் சுவாரஸ்யப்படுத்துது. இன்னும் சொல்லப்போனால் வாழ்க்கையைப் புரியவைப்பதில் ஓர் ஆசானுக்குரிய அத்தனை தகுதியும் பயணத்துக்கு உண்டு. ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு மட்டுமல்ல. ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் பயணப்படத் தெரியாத அல்லது விரும்பாத மனிதனின் மனத்தில், தேவையற்றவை தேங்கிக்கிடப்பதாகவே தோன்றும் எனக்கு. 'பையா' படத்தின் கதையும்கூட பயணத்தின் மகத்துவம் உணர்த்தும் கதைதான். அது மனம் சார்ந்தது; தேவை சார்ந்தது என எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்'' பயணதாசனாக மாறிவிடுவாரோ என்னவோ இயக்குநர் லிங்குசாமி. 'பையா' படத்தைப் பற்றிக் கேட்டோம்.

''கார்த்திக்கு, பருத்திவீரன், ஆயிரத்தில் ஒருவன், இரண்டு படங்களும் ஒருவிதமான முகமூடி அணிவித்திருப்பதாகவே தோன்றுகிறது எனக்கு. அந்த முகமூடி கிழித்து என் 'பையா' கார்த்தியாக அவரைக் காட்ட முற்பட்டிருக்கின்றேன்.


இயக்குநர் லிங்குசாமி

# கார்த்தியின் முகமூடி!

எந்தப் பாத்திரத்திலும் ஒன்றிவிடக்கூடிய ஒரு சிலரில் கார்த்தி, அதிசயமானவராகத் தோன்றுகிறார். பீமாவுக்குப் பிறகு சிறிய இடைவெளியில் நான் இரண்டு கதையை உருவாக்கி இரண்டையுமே கார்த்தியிடம் சொன்னேன். அதில் கார்த்தி தேர்ந்தெடுத்த இரண்டாவது கதைதான் 'பையா'. நிச்சயமாய் கார்த்தியின் வேறொரு பரிமாணத்தைப் படத்தில் பார்க்கலாம்.

'பையா'வின் ஹீரோயினால்தான் ஏகப்பட்ட விரும்பத்தகாத பிரச்னையில் சிக்கி, ஒரு வழியாக சுமுகமாகி, தமன்னா நடிப்பதாக முடிவாகியிருக்கிறது. நயன்தாரா, நல்ல நடிகை. 'யாரடி நீ மோகினி' படத்தில் அவரது பெர்ஃபார்மென்ஸை ரசித்துப் பார்த்தேன். என்னவோ தெரியவில்லை... அவருக்கும் எனக்கும் ஒத்துவரவில்லை அவ்வளவுதான். என் சொந்த நிறுவனமான திருப்பதிசாமி ஃபிலிம்ஸுக்கு மட்டும் படம் இயக்குகிறேன். மற்ற கம்பெனிக்கு இயக்குவதில்லை என்ற குற்றச்சாட்டு என் மீது வைக்கப்படுகிறது. வாய்ப்பு கிடைத்தால் வேறு கம்பெனியில் இயக்க மாட்டேன் என்றா சொன்னேன்? என் கம்பெனியில் மற்ற இயக்குநர்களுக்கும் வாய்ப்பளிக்கும் பரந்த மனப்பான்மை எனக்குண்டு'' என்கிறார்.

– மகிமைராஜன்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்